# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



சானியா 8 கோடி..!

KALKI ● 16.08.2009 ● ரூ.10.00 ● 96 பக்கங்கள்



பத்திரமா பாத்துக்கங்க..!

அறிவு ஆசாரியே... கற்பனை கொத்தனாரே...

களமிறங்குமா அ.இ.கா.க.?

தனிக்காட்டு ராஜா!

- இடைக் கோகல் ட்ராய்லர்

# கல்கி

16.08.2009





# சினி

'ஆடுகளம்' படத்திலிருந்து த்ரிஷா விலகினார் அல்லவா? அதனால் கடுப் பாகிப்போன தனுஷ், இவரைவிட மிகப் பெரிய நாயகியை நடிக்க வைத்து, த்ரிஷாவுக்கு நாக்-அவுட் கொடுக்க வேண்டும் என சபதம் செய்திருக்கிறாராம். அதற்காக ஐஸ்வர்யா ராயைப் பிடிக்கும் முயற்சியில் மும்முரமாக இறங்கியுள்ளார் கள்.

**(மாமனார் சிபாரிசு செய்வாரா?)**

இங்கே என்னென்னமோ செய்து பார்த்த ஷாம், வெற்றி பெற முடியவில்லை. தெலுங் கில் ஒரு படத்தில் இரண் டாவது நாயகனாக நடித்தார். அது சூப்பர் ஹிட். தொடர்ந்து 'டெலிவுட்' தயாரிப்பாளர்கள் அவரைச் சூழ்ந்துள்ளார்கள். மனிதர் குஷியில் இருக் கிறார்.

**(நிறைய கலர் சட்டை களுக்கு ஆர்டர் தந்துட்டீங் களா?)**

'நாடோடிகள்' படத்தில் நால்வரில் ஒருவராக வரும் 'விஜய்', பிரபல வசந்த் அன் கோ நிறுவனத்தின் அதிபர் வசந்தகுமாரின் மகன். அடுத்து அவரை தனி ஹீரோ வாக்கும் முயற்சியில் தந்தை இறங்கி யுள்ளார். அதற்கு முன்னோட்டமாக, தமது கடைகளின் வெளியே பெரிய பெரிய பேனர்களில் மகனை வித விதமாக நிறுத்தியுள்ளார்.

**(ஆடித் தள்ளுபடி மாதிரி, படம் வெளியானா 'டிக்கெட்'ல தள்ளுபடி உண்டா?)**

ஆயிரத்தில் ஒருவனுக்கு அடுத்து தனுஷை வைத்து 'மாலை நேரத்து



# சிப்ஸ்

மயக்கம்' என்ற பெயரில் ஒரு படத்தை இயக்கத் திட்டமிட்டார் செல்வராகவன். இதன் கதை 'வார் ஆஃப் ரோஸஸ்' என்ற ஆங்கிலப் படத்தின் ஜெராக்ஸ் என்ற செய்தி கோடம்பாக்கம் முழுக்க 'லீக்' ஆனதும் திட்டத்தைக் கிடப்பில் போட்டு விட்டார்.

*(சினிமாவுல இதெல்லாம் சகஜமப்பா!)*

தமிழ்த் திரைப்பட இயக்குநர்கள் சங்கம் சமீபகாலமாக ஒரு நல்ல விஷயத்தைச் செய்து வருகிறது. உதவி இயக்குநர்கள் எல்லா படங்களையும் தியேட்டரில் போய்ப் பார்க்கமுடியாது என்பதால், அவர்களுக்காக படம் வெளியான பதினைந்து நாட்களில் சங்க வளாகத்தில் இலவசமாகத் திரையிடுகிறார்கள். அப்படி சமீபத்தில் திரையிட்ட படம் 'நாடோடிகள்'.

*(ரொம்ப நல்லா இருக்கே...)*

'மெல் ராமசாமி' - இந்தப் பெயரைத் தெரியாத தமிழ்க் கதாநாயகர்களே இருக்க முடியாது. அந்த அளவுக்கு தமது கைமணத்தால் அனைவரையும் கவர்ந்தவர். இவர் விரைவில் ஒரு படத்தை இயக்குகிறார். இதற்காக பிரபல நடிகர்களிடம் பேச்சுவார்த்தை நடக்கிறது.

*(விருந்து பலமா இருக்குமா?)*

கே.எஸ்.ரவிக்குமாரின் உதவி இயக்குநர்களில் ஒருவர் சில தினங்களுக்கு முன்பு விபத்தில் காலமானார். சில மாதங்களுக்கு முன்பு ஒரு உதவி இயக்குநர் திடீரென 'ஹார்ட் அட்டாக்'கில் காலமானார். இதனால் அவரது மற்ற உதவி இயக்குநர்கள் செண்டிமெண்ட் பயத்தில் உள்ளனர்.

*(பயத்தை விட்டு ஜெயிச்சுக் காட்டுங்க பாய்ஸ்!)*

**நியூஸ் பாய்**




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர்கள் :
**கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா**

வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

ஆசிரியர் குழு :
044 - 4343 8822
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

விற்பனை பிரிவு :
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagal.com

சந்தா விவரம் (ஒரு வருடம்) :
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

**நூ**று நாட்களுக்குள் இடது கை விரலில் இரண்டாவது முறையாகக் கறுப்பு மை அடையாளம் பெறவுள்ளனர் ஐந்து சட்டமன்றத் தொகுதி வாக்காளர்கள். என்ன...? அப்ப ஆட்காட்டி விரல். இப்ப நடுவிரல். தமிழகத்தில் நடக்கவிருக்கிற இடைத்தேர்தல்களால் மாண்புமிகு வாக்காளர்களுக்குக் கிட்டியுள்ள பெரும்பேறு இது!

தமிழகத்தின் பெரிய தொகுதிகளுள் ஒன்று தொண்டாமுத்தூர். மூன்று லட்சத்து நாற்பதாயிரம் வாக்காளர்கள். சிறிய தொகுதிகளுள் ஒன்று கம்பம். ஒரு லட்சத்து நாற்பதாயிரம் வாக்காளர்கள்.

''தொண்டாமுத்தூர் தொகுதியில் நிரந்தர வாக்குவங்கி பலம் கொண்ட அ.தி.மு.க., ஐந்து சட்டமன்றத் தொகுதிகளின் இடைத்தேர்தலை முழுவதுமாகப் புறக்கணித்துள்ளதால் கம்யூனிஸ்ட் கட்சிகளும் தே.மு.தி.க.வும், பா.ஜ.க.வும் தங்கள் வேட்பாளர்களை அங்கங்கு களத்தில் இறக்கியுள்ளன. ஆயிரம் இருந்தும்... வசதிகள் இருந்தும் எனச் சொல்வது போல பிரதான எதிர்க்கட்சி அ.தி.மு.க. போட்டியில் இல்லை என்பதால், தனிக்காட்டு ராஜாவாக உலா வருகிறது தி.மு.க.


✱ ராஜப்பன்


✱ கந்தசாமி

அ.தி.மு.க.வுக்கென 'லம்ப்' ஆக விழுந்த வோட்டுகளை, யார் அள்ளப் போகிறார்கள் என்பதில்தான் கடும்போட்டி.

# "அதிக வோட்டு...

எப்படி இருந்தாலும் அ.தி.மு.க. புறக்கணித்துள்ள இந்த இடைத்தேர்தல், தி.மு.க. கூட்டணிக்கு மாபெரும் வெற்றியையே தேடித் தரும். மிக எளிதாகக் கிடைக்க இருக்கும் இந்த வெற்றி கலைஞருக்கு இனிக்குமா?'' எனக் கேட்கிறார் தொண்டாமுத்தூர் ஆனந்தன்.

**ப**ர்கூர், கம்பம், இளையான்குடி ஆகிய மூன்று தொகுதிகளில் தி.மு.க.வும், தொண்டாமுத்தூர் மற்றும் ஸ்ரீவைகுண்டம் ஆகிய இரண்டு தொகுதிகளில் காங்கிரஸும் போட்டியிடுகின்றன.

✱ ஆனந்தன்



## தொண்டாமுத்தூர்:

''தொண்டாமுத்தூர் எப்பவும்

## அழகிரி அதிரடி

இரட்டை இலைக்குச் சாதகமான தொகுதி. அது நிக்கலேங்கவும் எங்களுக்கெல்லாம் ரொம்ப யோசனையாத்தான் இருக்கு. எம்ஜிஆர் காலத்துலேருந்து எங்க வூட்ல ரெட்டை இலைக்குத்தான் வோட்டு. எங்களோட வோட்டை இப்ப யாருக்குப் போடுறதுனு ஒண்ணும் விளங்கலை!'' என்கிறார் தொண்டாமுத்தூர் பாப்பாத்தி பாட்டி.

தொண்டாமுத்தூரில் சாதி வாரியாகவும் வோட்டு பிரியலாம் என்கிற கருத்து உலவுகிறது. காங்கிரஸ் வேட்பாளர் கந்தசாமி, தே.மு.தி.க. வேட்பாளர் தங்கவேலு, கொங்கு முன்னேற்றக் கழக ஈஸ்வரன் ஆகியோர் கொங்கு வேளாளக் கவுண்டர் சமூகத்தைச் சார்ந்தவர்கள். பி.ஜே.பி.யின் சின்னராஜ் ஒக்கலிய கவுடர் பிரிவைச் சேர்ந்தவர். அ.தி.மு.க.வில் இருந்தபோது இத் தொகுதியின் முன்னாள் எம்.எல்.ஏ.

# 25 பவுன்!”



“கம்பம், ஸ்ரீவைகுண்டம், இளையான்குடி... தொகுதிகளில் அதிக வோட்டு வித்தியாசத்தை வாங்கித் தர்ற மாவட்டச் செயலாளருக்கு 25 பவுன் பரிசு!”

இவர். அதனால் 'அ.தி.மு.க வாக்கு, தன் சமூக வாக்கு ரெண்டும் பெற்று தனக்கே வெற்றி' எனக் கூறுகிறார் பி.ஜே.பி.யின் சின்னராஜ்.

''சாதிவாரியாக வாக்குகள் பிரியும் என்பதெல்லாம் மாயை. அது எடுபடாது. தொகுதிக்குள் கிராமத்துப் பெண்களும், இளைஞர்களும் எங்கள் கேப்டனை இப்பவும் கறுப்பு எம்.ஜி.ஆர் என்றே போற்றி வருகின்றனர். அதனால் வெற்றி, முரசு சின்னத்துக்கே!'' என்கிறார் தே.மு.தி.க வேட்பாளர் மாதம்பட்டி தங்கவேலு. தொண்டாமுத்தூர் தேர்தல் களத்தில் மார்க்சிஸ்ட் கட்சி வேட்பாளர் பெருமாள். இந்த ஐந்து முனைப் போட்டியில் தி.மு.க. ஆதரவு பெற்ற காங்கிரஸ் வேட்பாளருக்கு, கடும் சவாலாக இருப்பவை தே.மு.தி.க.வும் பா.ஜ.க.வும்தான்.

## கம்பம்:

ம.தி.மு.க.விலிருந்து விலகி தி.மு.க.வில் தன்னை இணைத்துக்கொண்டதால், கம்பம் தொகுதிக்கு இந்த இடைத்தேர்தல். தி.மு.க. வேட்பாளர் அதே கம்பம் ராமகிருஷ்ணன்தான். அ.தி.மு.க. போட்டியிடவில்லை என்றாலும் அதற்கு இணையான தேர்தல் பரபரப்பினை உண்டு பண்ணியுள்ளார் தே.மு.தி.க. வேட்பாளர் அருண்குமார். இவர் தி.மு.க. வேட்பாளரின் அண்ணன் மருமகன். வோட்டு மாமனாருக்கா.... மருமகனுக்கா... யார் கையில கம்பம்...!


அருண்குமார்


ராமகிருஷ்ணன்

மார்க்சிஸ்ட் வேட்பாளர் ராஜப்பன், தொகுதிக்குள் வாக்கு சேகரித்து வருகிறார். ''விவசாயம் நிறைந்த தொகுதி. அதனால் விவசாயத் தொழிலாளர்கள் அதிகம். அதனுடன் தி.மு.க. எதிர்ப்பு - இரட்டை இலை வாக்கு, மார்க்சிஸ்ட் கட்சிக்கு வெற்றி பலம் தரும்'' எனச் சொல்கிறார் அவர்.

''விவசாயிகளின் கடன் தள்ளுபடி, வரி ரத்து, விவசாயக் குடும்பங்களுக்குப் பல நலத் திட்டங்கள் என வாரி வாரி வழங்கி வருகிறது தி.மு.க. அரசு. அதனால் வெற்றி தி.மு.க.வுக்கே!'' என்கிறார் கம்பம் ராமகிருஷ்ணன்.

''அந்தந்தக் கட்சி வேட்பாளர்கள் வெற்றி எங்களுக்குத்தான்... வெற்றி

**கம்பம் தொகுதியில**
**மாமனாரும்-மருமகனும் போட்டியிடறாங்க.**
**ராமகிருஷ்ணன்(தி.மு.க.) மாமனார்:**
**அருண்குமார்(தே.மு.தி.க.) மருமகன்!**

எங்களுக்குதான்னு சொல்லிக்கிட்டே இருப்பாங்க. கடைசில யாரை ஜெயிக்க வைக்கிறதுன்னு வோட்டுப் போடுற நாங்கல்ல முடிவெடுக்கணும். இதுவரைக்கும் ரெட்டை



★ அன்னலெட்சுமி

அ.தி.மு.க. இந்த சட்டமன்ற இடைத்தேர்தலைப் புறக்கணிச்சிருக்கு.



★ பாப்பாத்தி

**"எம்.ஜி.ஆர். காலத்துலேர்ந்து நாங்க 'இரட்டை இலைக்கு'த்தான் வோட்டுப் போடுவோம். இப்ப யாருக்குப் போடறதுன்னு தெரியலை!"**

எலைக்குத்தான் வோட்டு போட்டு வந்திருக்கேன். அது நிக்கலேங்கவும் எங்க வோட்டு இப்ப விஜயகாந்த் கட்சிக்குத்தான்!'' என வெளிப்படையாகப் பேசுகிறார் கம்பம் சல்லிகேட் தெரு அன்னலெட்சுமி.

''ஒரு ரூவா அரிசி, இலவச கலர் டி.வி, புள்ளைத்தாச்சி பொம்பளைங்களுக்கு கர்ப்பகால நிதியுதவின்னு நெறைய செய்றதால எங்க குடும்பத்து வோட்டு எல்லாமே உதயசூரியனுக்குத்தான்!'' என்கிறார் காமயகவுண்டம்பட்டி செல்வி.

**க**ம்பம் நகரில் தி.மு.க. கூட்டணி கட்சி செயல்வீரர்கள் கூட்டம். ஆலோசனை வழங்கியவர், தி.மு.க. தென் மண்டல அமைப்புச் செயலாளர் மு.க.அழகிரி. அவரது அதிரடி பேச்சால் மேலும் களை கட்டத் தொடங்கிவிட்டது கம்பம் தொகுதி.

''முக்கிய எதிரி அ.தி.மு.க. நிக்கலேங்கவும், நம்ம கட்சிக்காரங்க அசால்ட்டா இருந்திடாதீங்க. அரசியல்ல எதுவும் நடக்கலாம். தோல்வி பயத்துல அ.தி.மு.க. வோட்டை எப்படி வாங்கறதுங்கற தந்திரம் எங்களுக்குத் தெரியும். என்ன தந்திரம்னு பத்திரிகைகள் மூலமா ஜெயலலிதா கேட்கிறார். அரசின் நலத் திட்டங்களைச் சொல்லி வோட்டு கேக்கறதுதான் அந்த தந்திரம். என்னோட பொறுப்புல ஸ்ரீவைகுண்டம், இளையான்குடி, கம்பம்னு மூணு தொகுதிகள். இதுல அதிக வோட்டு வித்தியாசம் வாங்கித் தர்ற மாவட்டச் செயலாளருக்கு இருபத்தைஞ்சு பவுன் தங்கச் சங்கிலி பரிசா தர இருக்கேன்'' என முத்தாய்ப்பாகப் பேசி முடித்தார் மு.க.அழகிரி.

அடுத்து வரும் போஸ்டர்கள் 'அள்ளித் தரும் அஞ்சா நெஞ்சரே!' என்று அழகிரியை வர்ணிக்கப் போகின்றன, பாருங்கள்!

செய்தி, சித்திரம்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# அதிர வைக்கும் ஆசியா!

ரவு பன்னிரண்டு மணிக்கு மறைஞ்சு, காலை மூணு மணிக்கு முகத்துல சுள்ளுன்னு சூரியன் அடிக்கற நாடு எது தெரியுமா?'' - கேள்வியால் சற்று சுவாரஸ்யப்படுத்துகிறார் வடபழநி ஆகாஷ் குழந்தையின்மை நல சிகிச்சை மையத்தின் நிறுவனர் டாக்டர் காமராஜ்.

''எங்களுக்குத் தெரியலை. நீங்களே சொல்லுங்க'' என்றதும் பட்டென்று பதில் வருகிறது அவரிடமிருந்து, ''ஐரோப்பாவில இருக்கற ஸ்வீடன்தான் அந்த நாடு.''

''எல்லா நாட்டுலயும்தான் சூரியன் மறையுது... உதிக்குது. குறிப்பாக ஸ்வீடன் நாட்டைப் பத்திச் சொல்ல என்ன காரணம்?''- அசராமல் அடுத்த கேள்வியைப் போட்டால், ''காரணம் இல்லாமலா... அந்த நாட்டோட கோத்தி பெர்க் நகர்ல World Association for Sexology ஏற்பாடு செஞ்சிருந்த மாநாட்டுல கலந்துக்க போனப்பதான் இந்த சூரியன் மேட்டர் தெரிய வந்துச்சு'' என்றவரிடம், ''சுத்தி வளைக்காம விஷயத்துக்கு வாங்க ஸார்'' என்றதும் விஷயத்தைக் கொட்ட ஆரம்பித்தார்.

''**உ**லக அளவுல பாலியல் தொடர்பான ஆராய்ச்சிகளையும், கண்டுபிடிப்புகளையும் பகிர்ந்துக்க இந்த மாநாட்டை WAS அமைப்பு ஏற்பாடு செய்திருந்தது. மற்ற உலக நாடுகள்லேர்ந்து 750 பாலியல் மருத்துவ நிபுணர்கள் கலந்துக்கிட்டாங்க. ஆனால், இந்தியாவிலிருந்து நான், டாக்டர் நாராயணரெட்டி, ஹைதராபாத் டாக்டர் ஒருத்தர்னு மூணு பேர்தான் கலந்துகிட்டோம். நம்ம டாக்டர்ஸ் ப்ராக்டீஸ் பண்றதுல காட்டற ஆர்வத்தை இதுபோன்ற நிகழ்ச்சிகளிலேயும் காட்டாதது வருத்தப்பட வேண்டிய விஷயம்தான். இன்னொண்ணு, இந்த நிகழ்ச்சியில கலந்துக்கறதுக்கு நுழைவுக் கட்டணம் ஒரு ஆளுக்கு ரூ. 40,000. அதனாலேயே பாதி டாக்டர்ஸ் இதுல கலந்துக்காம விட்டுட்டாங்கன்னு நினைக்கிறேன்'' என்றவரிடம், ''மாநாட்டைத் தவிர வேறென்ன ஸ்வீடன்ல விசேஷம்?'' என்று கேட்டால்,



● டாக்டர் காமராஜ்

''மாநாடு நடந்த முதல் நாள், லஞ்ச் ப்ரேக்ல கொஞ்சம் ரோட்ல உலாத்தலாமேன்னு வெளியில வந்தோம். அப்போ, ஒரு பெரிய ஊர்வலம் எங்களை க்ராஸ் பண்ணிப் போச்சு. மொத்தம் 2000 பேர் இருக்கும். என்ன ஊர்வலம்னு விசாரிச்சப்பதான் விவரம் புரிஞ்சது. அது ஓரினச் சேர்க்கையாளர்கள் ஊர்வலமாம். அந்த ஊர்வலத்துல அந்த நாட்டோட பிரபலமானவங்களும் இருந்தாங்கன்னு கூட வந்த நண்பர் விஷயத்தைச் சொன்னார். இப்ப

தான் இந்தியாவுல விவாதத்துக்கே வந்திருக்கோம். ஆனால் இவங்க வீதிக்கே வந்துட்டாங்களேன்னு எனக்கு ஒரே ஆச்சர்யம். ஆனா அவர் இன்னொரு தகவலைச் சொன்னதும் என் ஆச்சர்யம் மேலும் ஆச்சர்யமோ ஆச்சர்யமாகியது. 1952லேயே sex education- ஐ பள்ளிப் பாடத் திட்டத்தில் புகுத்திய நாடு ஸ்வீடன்தானாம்'' என்று ஆச்சர்யத்தை அடுக்கிக்கொண்டே போனார்.

''இரண்டாம் நாள் நிகழ்ச்சியில் பங்களாதேஷ் நாட்டைச் சேர்ந்த பாலியல் மருத்துவ நிபுணர் ஒருவர் பேசும் போது, 'உலகநாடுகளில் ஆசியக் கண்டத்தில் போலி மருத்துவர்கள் அதிகம். அதிலும் இந்தியா, பாகிஸ்தான், பங்களாதேஷ்... நாடுகளில் கொத்துக் கொத்தாய் இருக்கின்றனர். வளர்ந்த நாடுகளில் 1000 பேருக்கு ஒரு டாக்டர் என்று இருக்கின்றனர். ஆனால், இந்தியா போன்ற வளர்ந்து வரும் நாடுகளில் 5000 பேருக்கு ஒரு டாக்டர் என்று இருந்தாலே அது பெரிய விஷயம். இதுதான் போலி மருத்துவர்கள் பெருகக் காரணம் என்றும் விளக்கினார்'' என்றவரிடம், ''பயணத்துல மருந்து மாத்திரை வாடை அதிகமா வீசுதே ஸார்'' என்றோம்.

''அந்த மாநாடு முடிஞ்சதும் ப்ரிஸ்கிரிப்ஷன், மாத்திரை, டானிக் எல்லாத்தையும் மறந்துட்டு எங்களைப் புதுப்பிச்சுக்கறதுக்காக நானும் என் குடும்பமும் ஐரோப்பாவுல சில நாடுகளைச் சுத்திப் பார்த்தது தித்திப்பான அனுபவம்'' என்றார்.

**"ஆசியாவிலுள்ள வளரும் நாடுகளில் போலி மருத்துவர்கள் அதிகம்."**

''நெதர்லாந்தின் ஆம்ஸ்டர்டாம் ஒரு வினோதமான சிட்டி. காரணம், இது இருக்கறதே கடலுக்குள்ளே தான். இந்த சிட்டியைச் சுத்திச் சுத்தி ஆறுகள். எங்கே பார்த்தாலும் தண்ணீர்தான். கடைக்குப் போகணும்னாகூட படகுலதான் போயிட்டு வர்றாங்க. பாரம்பர்ய அழகுகளை அவங்க பாதுகாக்கற விதம் அருமையானது. ஆம்ஸ்டர்டாம்



* வாடிகன் சிட்டியில்...

சிட்டிக்கு நேரெதிர் ரோட்டர்டாம் சிட்டி. இங்க எல்லாமே புத்தம் புதுசு. காஸ்ட்லி சிட்டியும் கூட. வானத்துல பறந்து போற கொக்குக் கூட்டம் மாதிரி நிலத்துல கூட்டம் கூட்டமாக மஞ்சளா பூத்திருக்கற ட்யூலிப் மலர்கள் இங்கு பிரபலம்'' என்றவரின் பேச்சு இத்தாலி பக்கம் திரும்பியது.

''உலகத்துலேயே 880 பேருக்கு ஒரு நாடு இருக்குதுன்னா அது, இத்தாலியில இருக்கற வாடிகன்தான். இத்தாலியில எங்கேயும் இங்கிலீஷைப் பாக்க முடியலை. வாடிகன் சிட்டியில போப், சண்டே, வெட்னஸ்டே... இரண்டு நாட்கள்லயும் மக்களுக்குத் தரிசனம் தந்து ஆசிர்வதிக்கிறார். இத்தாலியை ஆண்ட எல்லா மன்னர்களோட சிலையும் ரோம் நகர்ல இருக்கு. ரோம்லேர்ந்து ஐந்து மணி நேரப் பயணத் தூரத்துல இருக்கு பைசா நகரம். உலக அதிசயத்துல ஒண்ணான பைசா சாய்ந்த கோபுரம் இங்கேதான் இருக்கு. இந்தக் கோபுரம் அந்தக் காலத்துல ஒரு மணிக் கூண்டா இருந்திருக்கு. நாளுக்கு நாள் சாய்ஞ்சுக்கிட்டு வந்த இந்தக் கோபுரத்தை இப்போ விஞ்ஞானிகள் சாயாம நிறுத்தியிருக்காங்க'' என்றவர், ''பைசா கோபுரத்துக்கு ஏன் அந்தப் பெயர் வந்துச்சு?'' என்று வழக்கம் போல கேள்வியைக் கேட்டுவிட்டு வழக்கம் போல பதிலை அவரே சொன்னார், ''அந்தக் - கோபுரத்தைக் கட்டின என்ஜினீயர் பேர் பைசா.''

## "880 பேர் மட்டுமே வாழும் ஒரே நாடு வாடிகன்"

''வெனிஸ் போனீங்களா?'' என்றால், ''சாகறதுக்கு முன்னாடி வெனீஸ் நகரத்தை எல்லாரும் கட்டாயம் ஒரு தடவை பார்க்கணும்ங்க. பழைமையான அந்த நகரத்தோட தெருக்கள்... அங்கே தொலைஞ்சு போனாகூட அது பெருமைப்பட வேண்டிய விஷயம்தான்'' என்கிறார்.

''சுவிட்ஸர்லாந்து. top of Europe. அங்கே இருக்கற சின்னச் சின்ன பனிமலைகளை அருமையா பராமரிக்கறாங்க. உலகத்திலேயே உயர்ந்தது இமயமலை. அதை நாம சின்னதா கூட எஸ்டாபிளிஷ் பண்ணலை. சுத்திச் சுத்தி பனியால் சூழ்ந்திருக்கும் சுவிட்ஸர்லாந்து சிகரங்கள்ல நிறைய ரெஸ்டாரெண்ட் இருக்கு. அங்கே இந்திய உணவு கிடைக்கறது ஆச்சர்யத்திலும் ஆச்சர்யம்'' என்றவரிடம், ''ஐரோப்பாவுல இருக்கற மக்கள் எப்படி?'' என்று கேட்டால், ''ஐரோப்பா, அமெரிக்காவுல இருக்கற மக்கள் 'குடும்பம்'ங்கற அமைப்பு மேல நம்பிக்கை இழந்துக்கிட்டு வர்றாங்க. 1960களில் 15 சதவிகிதமா இருந்தது விவாகரத்து. இப்போ, கல்யாணம் ஆனவங்கள்ல 50 சதவிகிதம் பேர் இரண்டே வருஷத்துல விவாகரத்து வாங்கிக்கறாங்க. இதுக்கு இந்தியா எவ்வளவோ தேவலாம்'' என்று அதிர்ச்சி வைத்தியம் கொடுக்கிறார் டாக்டர் காமராஜ்.

- மகிமைராஜன்

• ரோம் நகரில் குடும்பத்தினருடன்...



# தெரியாமத்தான் கேட்கறேன்...



சுருளிப்பட்டி தைலா

''மாநகரப் பேருந்து விபத்துகளில் இறந்துபோன ஆயிரத்துக்கும் மேற்பட்டோருக்கு அரசு இன்னும் நஷ்டஈடு வழங்காமலே இருக்கிறது. நிலுவையில் இருக்கும் மொத்த நஷ்டஈட்டுத் தொகை பன்னிரண்டு கோடி ரூபாய்.'' - முன்னாள் காங்கிரஸ் எம்.பி. கார்வேந்தன்.

**நஷ்டஈடு கடன் பாக்கி நஷ்டத்தையே ஓவர்டேக் பண்ணிடுமாங்க?**

''விருத்தாசலம் தொகுதியில் விருத்தகிரி என்ற பெயர் பிரபலமானது. எனவே அந்தப் பெயரில் விரைவில் படம் எடுக்கவுள்ளேன். இயக்குநர், கதாநாயகன் இரண்டு பொறுப்பையும் ஏற்றுள்ளேன்.'' - விஜயகாந்த்

**படம் ஹிட் ஆனா விருத்தகிரி; தோத்துட்டா வருத்தகிரியா?**

''அ.தி.மு.க.வில் கடந்த ஒன்றரை ஆண்டுகளாகவே கடும் மன நெருக்கடியில் இருந்தேன்.'' - அனிதா ராதாகிருஷ்ணன்

**- நாங்க கூடத்தான் தினம் தினம் ராவுல கொசுக்கடியில அவதிப்பட்றோம். அதுக்காண்டி வூடா மாத்திக்க முடியும்?**

ஒரு கோடி ரூபாய் லஞ்சம் கேட்டதற்காக பூட்டாசிங் மகன் ஸ்வீட்டியை சி.பி.ஐ. கைது செய்தது.

**- அப்பனுக்கு கடுக்கா கொடுக்கற பயலுங்களுக்கு மட்டும் எப்படி சர்க்கரையா பேர் வைக்கறாங்க?**

பதினைந்து ஆர்.டி.ஓ. அலுவலகங்களில் (சென்னை) ஒரு மாத லஞ்ச வசூல் 4.5 கோடி ரூபாய்!

**- லைசென்ஸே தேவைப்படாத தொழில்ல ஆர்.டி.ஓ. அண்ணாச்சிங்களை யாராச்சும் பீட் பண்ண முடியுமா?**

● பட்டாசுத் தொழிலை மையப் படுத்தி வந்திருக்கும் நெகிழ்ச்சியான கதை. அங்கங்கே பட்டாசு தீ விபத்து நடக்கற நேரத்துல வந்திருக்கு.

● மலையன் - பாத்திரத்துக்கு ஏத்தாப்ல கரண் உடம்புலயும் நடிப் புலயும் செம ஹாட். பட், பாறைக் குள் ஈரமாக கரணுக்குள் காதல்.

● அந்தக் காதல் அவரை மென்மை யாகவும் வன்மையாகவும் மாத்துவது தான் படத்தின் மிகப் பெரிய ப்ளஸ்.

● ஹீரோயின் ஷம்மு. சும்மா கும்முன்னு இருந்தாலும் நடிப்புல ஏன்



அண்ணன் வார்த்தையைத் தட்டாத ஐந்து அண்ணன் தம்பிகள் கதை. ஏறக் குறைய நவீன பஞ்சபாண்டவர்கள். இவர்கள் குடும்பத்துக்குள் வந்து சகுனி போல பகடை உருட்டுகிறார் சிம்ரன். அர்ஜுனன் போல இருக்கும் சுந்தர்.சி. சும்மா இருப்பாரா...? சிம்ரனா... சுந்தர்.சி.யா..? நீயா... நானா... என மீதிக் கதை போகிறது... போகிறது... போய்க் கொண்டே இருக்கிறது!

ப்ளஸ்

● மிடுக்கான தோற்றத்திலும், விஸ்வரூபச் சண்டையிலும், நினைத்ததைச் சாதித்திருக் கிறார் சுந்தர்.சி.

● அவர் அடிக்கும்போது எதிரிகள் இருபது அடி தூரம் போய் விழுவதை நம்ப முடிகிறது. அப்படீன்னா, சண்டைக் காட்சி ஓ.கே.ன்னு தானே அர்த்தம்!

● குடும்பத் தலைவன் பாத்திரத்தில் நாசர், கஞ்சி போட்ட சட்டை மாதிரி அநியாயத் துக்கு விறைப்பு. ஆனாலும் சென்டிமென்ட் காட்சிகளில் இறுக்கம் தளர்வது ஆறு தல்.

● காமெடி இருக்கான்னு கேட்கறீங்களா... விவேக் இருக்கார். நம்பிப் போகலாம்!

● 'சிக்' சிம்ரன் திரையில் தோன்றும்போது அவரது வில்லத்தனத்தால் பக்பக்னு அடிக்குது நெஞ்சு.

● கன்னட தொட்டண்ணா (வில்லன்) படு சூப்பர்ண்ணா...

● ' சோக்கு சுந்தரி...' பாடலிலும் பின்னணி இசையிலும் இமானின் இருப்பு தெரிகிறது!

மைனஸ்

● பாடல் காட்சியில் டான்ஸ் ஆடணும்னு சுந்தர்.சி.க்குத் தெரியுமே...(?!) பிறகு ஏன் உட்கார்றார், நடக்கிறார், படுக்கிறார், உருளு றார்... கொஞ்சமாவது மூவ்மெண்ட் காட்டுங்க அப்பு.

● ஹீரோயின் அதிதி தன் பங்கை வெகு கவர்ச்சியாகச் செய்திருக்கிறார். இப்ப அது தானே தமிழ்ப் பட ஹீரோயின்ஸ் வேலை.

● தெரிந்த கதை... அறிந்த க்ளைமாக்ஸ். டைரக்டருக்கு எப்படித் தெரியாம போச்சு...? பெண்ணோடு ஆண் மோதி ஜெயிக்கும் அத்

# ஐந்தாம்

# மலையன்

பம்முறாங்க? அதனால்தான் அவர் வர்ற காட்சிகளை டைரக்டர் கோபி குறைச்சுட்டாரோ?

● ஆனால், கரிக்கட்டையாகக் கருகிக் கிடக்கையில் கண் கலங்க வைக்கிறார்.

● உதயதாரா, ஷம்முவோட போட்டி போட்டுக்கிட்டு நடிப்புன்னா என்னன்னு கேட்கறார். டைரக்டர் சொல்லித் தந்திருக்கலாம்.

● சிவகாசியின் அன்றாடங்களை அங்குலம் அங்குலமாகக் காட்சிப்படுத்தியிருப்பதில் கவிதை.

● எதிரெதிர்த் துருவங்களாகக் கலக்கல் கான்ட்ராஸ்ட் காட்டியிருக்கும் சரத்பாபுவும், ராஜன் பி.தேவும் பாத்திரத்துக்குக் கச்சிதம்.

● நடந்த வெடி விபத்தை மறைக்கவும், முதலாளியைக் காப்பாற்றவும் கரண் சொல்லும் காரணம் நச்சோ நச்.

● தினாவின் இசை, ஸ்ரீதரின் ஒளிப்பதிவு ஜாடிக்கேத்த மூடி.

**மலையன் - பட்டாசுக் கவிதை.**

தனை லாஜிக்கோடும் படம் வந்திருக்கிறது.

● படம் எப்படி? **டோண்ட் வொர்ரி பி ஹேப்பி.**

**- மகிமைராஜன்**





# கல்கி



2009 ஆகஸ்ட் 16
விரோதி ஆடி 31
மலர் : 68
இதழ் : 3

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## தேர்தல் திரிசமங்கள்!

"திருமங்கலத்தைக் காட்டிலும் பெரிய வெற்றியை ஸ்ரீவைகுண்டம் இடைத்தேர்தலில் அடைவோம்" என்று சூளுரைத்திருக்கிறார் மு.க.அழகிரி. திருமங்கலத்தில் தேர்தலுக்கு முன் நடந்த விதிமீறல்கள் நாடெங்கும் அதிர்ச்சி அலைகளைக் கிளப்பியது இன்னும் பசுமையாகவே நமக்கு ஞாபகமிருக்க, அழகிரியின் சூளுரை, ஐந்து தொகுதிகளில் நடைபெறவிருக்கும் இடைத்தேர்தல்கள் குறித்து பெரும் கவலையைத் தோற்றுவிக்கிறது.

தேர்தல் நடைமுறைகளில் ஆளுங்கட்சி அதிகாரம் செலுத்தி தலையிடுகிறது; வீடு வீடாக வோட்டுக்காகப் பணம் விநியோகமாகிறது; தேர்தல் முடிவுகளில் தில்லுமுல்லு நடக்கிறது; மின்னணு வோட்டுப் பதிவு இயந்திரங்களில் திரிசமம் செய்யப்படுகிறது போன்ற குற்றச்சாட்டுகள், எக்கட்சி ஆட்சியில் இருந்தாலும் எழுவதென்பது சகஜமாகிவிட்டது. 'மின்னணு வாக்குப்பதிவு முறையைக் கைவிட்டு, பழைய வாக்குப்பதிவு முறைக்கு மாறவேண்டும்' என்று ஜெயலலிதா கூறுகிறபோது சலிப்புதான் ஏற்படுகிறது!

'மின் அணு இயந்திரங்களை முறைகேடாகப் பயன்படுத்த இயலும்' என தேர்தல் ஆணையரிடம் பலர் புகார் கூற, 'அப்படி நடக்கவே முடியாது' என ஆணையம் உறுதி அளிக்க, ஒரு தன்னார்வத் தொண்டு நிறுவனம், பிரமுகர்கள் பலர் முன்னிலையில் 'செயல்முறை விளக்கம்' அளித்து, வாக்குப்பதிவு இயந்திரத்தில் எப்படி மோசடி நடத்தலாம் என நிரூபித்துக் காட்டியுள்ளது! ஆகக்கூடி,

கொடுக்கற பணத்தை வாங்கிக்கிட்டு ஒழுங்கா வோட்டுப் போடு!




எந்த முறையில் தேர்தல் நடந்தாலும், அதிகார பலம் உள்ளவர்களால் முறைகேடுகளை நிகழ்த்த முடியும் என்பதும் சேர்ந்தே நிரூபணமாகியிருக்கிறது!

தீர்வு, தேர்தல் நடத்தப்படும் முறையில் இல்லை; அடிப்படை நேர்மை, நாணயம் போன்றவற்றைக் கடைப்பிடிப்பதில்தான் உள்ளது. ஜெயலலிதா ஆட்சியில் இருந்த காலத்தில் தேர்தல் நடந்தபோது, தி.மு.க. அவர் பேரில் குற்றச்சாட்டுகளைச் சுமத்தத்தான் செய்தது!

தேர்தல் பணியில் உள்ள ஊழியர்களை, ஆளுங்கட்சி அதிகார பலத்தைக் காட்டி வளைத்துப் போட்டுக் கொண்டு தில்லுமுல்லு செய்வதனால் ஆதாயம் பெருக்கிக் கொள்கிறது. இதுபோன்ற பல்வேறு அவலங்கள் நிற்காத வரையில், தேர்தல் முடிவுகளும் தர்ம நியாயப்படி அமையமாட்டா!

தேர்தல் கமிஷன் என்னதான் கெடுபிடிகளைக் கையாண்டாலும், மத்திய ரிசர்வ் போலீஸ் வந்து காவல் இருந்தாலும், பல வகை முறைகேடுகள் செய்வதில் நம் அரசியல்வாதிகள் கைதேர்ந்தவர்களாகிவிட்டார்கள்!

அவர்களைத் தட்டிக்கேட்டு அவர்களது முறைகேடுகளுக்குத் தண்டனை வழங்கக்கூடிய வாக்குச்சீட்டு என்னும் ஆயுதத்தைக் கையில் வைத்துள்ள வாக்காளர்களோ, வோட்டுப் போடுவதற்கு, கூசாமல் பணம் பெற்றுக்கொள்ள ஆரம்பித்துவிட்டார்கள்! இந்நிலையில் தட்டிக்கேட்கும் உரிமையோ தகுதியோ அவர்களுக்கு ஏது?

ஜனநாயகம் என்பது, மக்களின் பிரதிநிதிகளாகச் சிலர் இருந்து ஆட்சி செய்கிற முறை என்பதே மறந்துபோகும் அளவுக்கு நிலைமை சீர்கெட்டுவிட்டது! அதிகார பலத்தைச் சம்பாதிக்கும் ஒரு வேட்டைக்களமாகத் தேர்தல் களம் மாறிவிட்டது! இதற்கு இடங்கொடாமல் வாக்காளர்கள்தான் விரைந்து விழிப்படைய வேண்டும். பண பலத்தினால் வெற்றிபெற எண்ணுவோரை நிராகரித்து, பெரும் எண்ணிக்கையில் வாக்களிக்க முன்வரவேண்டும். வாக்காளர்கள் விழிப்புணர்வு கொண்டால், அரசியல்வாதிகளுக்குத் திருந்துவது தவிர வேறு வழி இராது! ●

''உமா... நானும் நீயும் சேர்ந்துதானே நானோவுக்கு அப்ளை பண்ணினோம்? உனக்கு விழலை போலிருக்கே?''

''ஆகஸ்ட் பத்தாம் தேதி வீட்டிலே ஒரு ஃபங்ஷன் வைச்சிருக்கேன்... எல்லோரும் 'நானோ' விழுந்ததுக்கு டிரீட் வைக்கலையேன்னு கேட்டுடக் கூடாது பாரு... நீ அவசியம் வரணும்... என்னடா இவளுக்கு மட்டும் விழுந்துடுத்தேன்னு ஃபீல் பண்ணிட்டு வராம இருந்துடாதே... ஓ.கே.வா?'' என்று நண்பி உமாவை செல் மூலம் உசுப்பேற்றினாள் ஜானகி.

''இதோ பாருங்க... நம்ம சாஸ்திரிகளுக்கு ஒரு ஃபோன் போட்டுக் கேளுங்க...'' என்றாள் என்னிடம்.

''ஜானு... கார் டெலிவரிக்கு இன்னும் ஒரு மாசம் ஆகும்... அப்புறமா அவரைக் கேட்டு நல்ல நாளா பார்த்து எடுத்துட்டு வரலாமே என்ன அவசரம்?'' என்றேன்.

''அட... புது வீட்டுக்குக் கிரஹப் பிரவேசம்னு ஹோமம் எல்லாம் செஞ்சு தானே வந்தோம். அது மாதிரி 'கார் பார்க்கிங்'குக்கு தோஷ நிவர்த்தி செய்ய



# நானோ விஜயம்

வேண்டாமா..?''

''உன்கென்ன பைத்தியமா?'' என்றேன் எரிச்சலுடன்.

''சொன்னா போய்க் கேட்பீங்களா அதை விட்டுட்டு...'' என்று விரட்டியதில், அடையாரில் இருக்கும் சாஸ்திரி வீட்டினை அடைந்தேன்.

''வர்ற இருபத்தேழாம் தேதி வாகன யோகமா இருக்கு... கணபதி ஹோமம் பண்ணிட்டு ஒரு வாகன வாஸ்து சாந்தி ஹோமம் பண்ணிடலாம்'' என்று தர்ம சாஸ்திரம் ஒன்றிலும் சொல்லாத ஹோமத்தைச் சொன்னார்.

தேரோட்டி பார்த்தசாரதி படத்தின் முன்னால் பார்க்கிங் ஏரியாவின் 'கார்' பிரவேச ஹோமத்துக்கு பத்தாயிரம் அழுத முதல் ஆசாமி நானாய்த்தான் இருப்பேன்!

''அம்மா! கார் வந்ததும்... பார்க்கிங்கின் தென் கிழக்கிலே அக்னிமூலையிலே என்ஜின் இருக்கிற மாதிரி பார்த்துக்கணும்! ஈசான்யமா ஸ்டியரிங் இருந்தா தேவலை... மாமாவோட தனுர் ராசிக்கு அவர் வலது பக்க சீட்லேயும்... உங்களோட கன்னி ராசிக்கு ஜஸ்ட் ஆபோசிட் சீட்லேயும் உட்கார்ந்து பிரயாணம் செஞ்சா ஆக்ஸிடென்ட் ஒண்ணும் ஆகாம தடுக்கலாம்... எனக்குத் தெரிஞ்ச டிரைவர் ஒரு பையன் இருக்கான்... அவன் ரேவதி நட்சத்திரம்... பேரு மாருதி... நியூமராலஜி பிரகாரமும் உங்க காருக்குப் பொருத்தமான ஸேஃப்பான டிரைவர்'' என்று ஜானகியின் வீக்னெஸ்களை அறிந்தவராய், தனக்கு வேண்டியதைச் சாதித்துக் கொள்ளும் சாமர்த்தி யத்தில் அளந்து விட்டுவிட்டு அவர் போய்த் தொலைந்ததில், என் பாடு பாடாய்ப் பட ஆரம்பித்துவிட்டது.

''ஏங்க போய்ப் பாருங்க... அந்த அயர்ன் வண்டிக்காரன் நம்ம கார் பார்க் கிங்லே நின்னு இஸ்திரி போடறான். வெளியே போகச் சொல்லுங்க'' என்ற ஜானகியின் கட்டளைக்கு அடி பணிய வேண்டி இருந்தது!

''ஏதோ... நாய் அசிங்கம் பண்ணி யிருக்கு... போய் சுத்தம் பண்ணிட்டு வாங்க'' என்று துடைப்பமும், பக்கெட்டுமாக என் கோலத்தை ஒருநாள் அலங் கோலம் செய்தாள்.

''யாரோ ஒரு சோம்பேறி நம்ம கார் பார்க்கிங்லே தூங்கிட்டிருக்கான்... இந்த வாட்ச்மேன் என்ன பண்றான்? போய் அசோஸியேஷன்லே சொல்லிட்டு வாங்க'' என்றாள் மற்றொரு நாள்.

**நா**னோ விருந்து நாளும் வந்தது! சுமார் நூறு பேருக்கு சாப்பாடு ஆர்டர் கொடுத்துவிட்டு, 'நானோ ட்ரீட்'டுக்காக நானோ விலையில் நான்கில் ஒரு பங்கை மூக்கால் அழுத பரிதாபத்துடன், வருபவர்களை எதிர்கொண்டழைக்க உட்கார்ந் திருந்தேன்.

ஜானகி பாமா விஜயம் சௌகார் ஜானகியாய், பெருமை ஹைட்லைட்டாய்ப்

அகிலா கார்த்திகேயன்

பளிச்சிட, யார் யாரிடம் எப்படியெல்லாம் பீற்றிக் கொள்ளலாம் என்ற சிந்தனையில் அலைந்துகொண்டிருந்தாள்.

நண்பி உமாதான் முதல் விருந்தாளி.

''ஜானு! அதுக்குள்ளே கார் டெலிவரி ஆயிடுத்து போலிருக்கே... பார்க்கிங்லே புதுசா நிறுத்தி இருக்கே... பார்த்தேன்... ஆமாம் 'கலர்' என்ன இப்படி காடியா செலக்ட் பண்ணியிருக்கே... நீயா சொன்ன கலரா... இல்லே அவனா ஏதோ ஒரு மட்டமான கலர்லே தள்ளி வுட்டுட் டானா... எங்க வீட்டுப் பக்கத்திலே ஒரு கார் மெக்கானிக்கைக் கேட்டேன். அவன்



ரொம்ப கெட்டிக்காரன். இந்த காரோட பெர்ஃபர்மென்ஸ் பத்தி ரொம்ப சந்தேகமா சொல்றானே'' - இப்படி உமா தன் வயிற் றெரிச்சலை வார்த்தைகளாக்கிப் படபடத் துக் கொண்டிருக்க, எனக்கும் ஜானகிக்கும் குழப்பமானது.

''எங்க பார்க்கிங்லே காரைப் பார்த்தியா? 'எஃப் ஒன்'னுன்னு கார் பார்க் கிங்லே எழுதியிருந்ததா?'' என்றாள் ஜானகி.

உமாவுக்கு ஸ்ருதி குறைந்தார்போலா னது.

''எஃப் ஒன்தான் உன் ஃப்ளாட் நம்பர்னு தெரியுமே'' என்றாள் உமா.

''ஏங்க! உமா சொல்றதைக் கேட்டீங்க இல்லே... யாரோ பன்னாடை நம்ம கார் பார்க்கிங்லே காரை பார்க் பண்ணி வைச் சிருக்கான் போலிருக்கு. நமக்கு இன்னும் கார் வர இருபது நாளுக்கு மேலே ஆகும்னு டீலர் சொல்லியிருக்கான்... அதுவரைக்கும் பார்க்கிங்கைக் காப்பாத் தறது பெரும்பாடாய்ப் போயிடும் போலி ருக்கே. கார் பார்க் பண்ணியிருக்கற மூதேவியை உடனே அங்கிருந்து எடுக்கச் சொல்லுங்க.''

ஜானகி ஆக்ரோஷமாகக் கத்தியது பல காதுகளுக்குக் கேட்டிருக்கும் போலும். வீட்டினுள்ளே இருந்து ஒரு குரல் வந்தது.

''இதோ பாரும்மா... சும்மா பன்னாடை, மூதேவின்னு நீ பாட்டுக்கு

> ''தலைவரே, நாமதான் தேர்தல்ல ஜெயிச்சாச்சே... இன்னமும் என்ன கவலை?''
>
> ''மனசாட்சி உறுத்துது''
>
> **- என்.வி.ரமணி**

பேசிக்கினே போற...? உன் வூட்லே வேலை செய்ய வந்தா உன் வூட்டு கார் பார்க்கிங்லேதானே நிறுத்துவாங்க. அதுக் கென்னவோ இத்தினி ஆர்ப்பாட்டம் பண்றே... நாலு வூட்லே முறைவாசல் பண்ண வேண்டி கிதே, டயத்துக்குப் போவ முடியலையேன்னுதான் குலுக்கல்ல நானோ வாங்கிக்கிறேன்... எடுத்து கடாசிடு வேன்றயே... நல்லாகிதா சொல்லு... பத்து நிமிசத்துலே நானே ஒட்டிட்டுப் பூடப் போறேன்'' - வீட்டு வேலைக்காரியிட மிருந்து இப்படி ஒரு பதிலடி வருமென்று எதிர்பார்க்காத ஜானகி, லாரியில் நசுங்கிய காராய் நொறுங்கிப் போனாள்.

உமாவின் முகத்தில் இலவசமாக நானோ கிடைத்தாற்போல் இரட்டிப்பு மகிழ்ச்சி. ●

# ஆல்ஃபா மைண்ட் பவர்

**ஆழ்மனதின் சக்தி!**



**ALPHA™ MIND POWER**

"Unwind Your Mind & Empower Yourself"

**மனோ சக்தி நிபுணர் டாக்டர் விஜயலக்ஷ்மி பந்தையன்**

அளிக்கும் இந்தியாவின் பழம்பெரும் சித்தர்களின் சக்தியுடன் கூடிய ஒரு நாள் ஆல்ஃபா தியான பயிற்சி



- மன அழுத்தம் குறைக்க
- பண வரவை அதிகரிக்க
- உறவுகளைச் சீர்படுத்த
- குடும்பத்தில் அன்பு நிலவச் செய்ய
- நோய் தீர்க்க, நிம்மதியாக தூங்க
- பரீட்சையில் அதிக மார்க் வாங்க
- மகிழ்ச்சியுடன், தன்னம்பிக்கையுடன், வெற்றியுடன் வாழ

தபால் மூலம் கற்கலாம்
ஆல்ஃபா மைண்ட் பவர்
ஆடியோ சிடி மற்றும்
பயிற்சி புத்தகம்
ஆங்கிலம் மற்றும்
தமிழில் தபால்
மூலம் பெறலாம்.

**ஒரு நாள் பயிற்சி மட்டுமே!**

**ஆல்ஃபா தியான அனுபவம் இதோ ஒரு கடிதம்**

ஆகஸ்ட் 2009

**நா**ங்கள் எப்பொழுது வெளிநாட்டுச் சுற்றுப் பயணம் மேற்கொண்டாலும் அந்த நாட்டிற்குரிய வழிகாட்டிப் புத்தகத்தை எடுத்துச் செல்வது வழக்கம். இந்நிலையில் நாங்கள் பூட்டான் செல்வதற்கான வழிகாட்டிப் புத்தகம் எங்கு தேடியும் கிடைக்காமல் மிகவும் சிரமப்பட்டேன். ஆல்ஃபா முத்திரையைப் பயன்படுத்தி கடைசியாக ஒரு கடைக்குச் சென்றேன். எல்லா புத்தகமும் விற்பனையாகி கடையில் ஒரே ஒரு புத்தகம் இருப்பதாகச் சொல்லி கடைக்காரர் அப்புத்தகத்தை எனக்குக் கொடுத்தார். ஆல்ஃபாவிற்கு நன்றி! குருஜிக்கு நன்றி!

திருமதி பிரேமா,
சென்னை

தொலைக்காட்சிகள் ஆகஸ்ட் 4 அன்று
பகல் 12.05 மணிக்கு பொதிகை டி.வி.யில்
எமது நேரடி ஒளிபரப்பைக் கண்டு பயன்பெறுங்கள்!

ஆர்.எஸ்.ஆர்.பிளாசா, 3வது தளம், 50, 51 ஆற்காடு ரோடு,
சாலிகிராமம், சென்னை - 600 093. இந்தியா
ஃபோன் :+91- 44 - 2376 0007, 2376 6555
மொபைல் : 98414 02000, 98412 72146, 98416 96664
e-mail : amp@alphamindpower.net www.alphamindpower.net

அடுத்துவரும் பயிற்சி வகுப்பு

**மதுரை - 9.8.09**
**சென்னை - 30.8.09**
**சேலம் - 13.9.09**

---



ஸ்ரீ சுவாமி நாத சுவாமி சஹாயம்

ॐ

**இந்தியாவின் சிறப்புமிக்க முன்னணி ஸ்தாபனம்**

**SGS**

# Sri Gomathi Sankar Catering Service

# ஸ்ரீ கோமதி சங்கர் கேட்டரிங் சர்வீஸ்

**Master Cook Catering Contractors**



சமையல் சக்கரவர்த்தி
மாம்பலம் **G. சங்கர் ஐயர்**

**பாரதம் முழுவதும்**

15/6, Nayakkamar Street, Near Postal Colony, West Mambalam, Chennai - 600 033.

**Ph: 2371 2318 Cell: 98411 13559, 93810 53924, 2483 2334 (R)**

# ஓரிசா சட்டப்பேரவையில்

● பி.பி.சுந்தரேசன், கரூர்

? அரசு ஊழியர்களுக்கு விலைவாசி உயர்வுக்கேற்ப சம்பளம் கூடிக்கொண்டே போகிறது. தினக்கூலி, தனியார் துறையில் மாதச் சம்பளம் வாங்குபவர்களுக்கு அவ்வாறு உயரவில்லையே... தவிக்கிறார்களே?

! அரசு ஊழியர்கள் மட்டுமல்ல, தொழிற்சங்கம் ரீதியாக இணைந்துள்ள பல்வேறு ரக ஊழியர்களுக்கும் சலுகைகள் கிட்டத்தான் செய்கின்றன. அத்தகைய இணைப்பு இல்லாத பெரும்பான்மையினர் வருந்தத்தான் செய்கிறார்கள். எனவேதான் விலைவாசி அதிகம் உயராத அளவில் பொருளாதாரக் கொள்கை வகுப்பது அரசின் கடமையாகிறது. நம் அரசோ, இதற்கு நேர்மாறாகச் செயல்படுகிறது!

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

? "மும்பை தாக்குதலில் ஈடுபட்ட கசாபை மக்கள் முன்னிலையில் தூக்கிலிட வேண்டும்; இதுவே மக்களின் விருப்பம்" என்று பால் தாக்கரே சொல்கிறாரே?

! பால் தாக்கரே இனிமையாகவும் தேசிய உணர்வோடும் பேசவேண்டும் என்பதுதான், மக்களின் முதலும் முடிவுமான விருப்பம்.

● இரா.சக்கரபாணி, மதுரை

? இடைத்தேர்தல்களில் அ.தி.மு.க.வினர் யாரும் வாக்களிக்கக்கூடாது; வாக்குப்பதிவு சதவிகிதத்தைக் குறைக்க மக்களிடையே தீவிர பிரசாரம் செய்யவேண்டும் என்று ஜெயலலிதா கட்டளையிட்டுள்ளது பற்றி..?



* ரே லேட் கவலை!



* அழகற்ற ஆணை!



* பகுத்தறிவு ஃபார்முலா



* மறந்த விருப்பம்!

! வாக்களிப்பது ஜனநாயகக் கடமை; அடிப்படை உரிமை. அதைத் தடுப்பதும் தவிர்க்குமாறு பிரசாரம் செய்வதும் குற்றம். ஒரு கட்சித் தலைவருக்கு இது அழகல்ல.

● சரா.ஏ.முரளி, கள்ளக்குறிச்சி

? அல்-கைதா, தலிபான் போன்ற பயங்கரவாதிகளின் கைக்கு, பேரழிவு அணு ஆயுதங்கள் போய்ச் சேரும் ஆபத்து இருப்பதாக அமெரிக்க பாதுகாப்பு அதிகாரி மைக் முல்லென் எச்சரிக்கை விடுத்துள்ளாரே?

! அமெரிக்கா உற்பத்தி செய்யும் போர் ஆயுதங்கள் விற்பனையாக வேண்டும் என்பதற்காக, தீவிரவாத இயக்கங்களை மறைமுகமாக ஊக்குவித்தபோதே இந்த எச்சரிக்கை உணர்வு தோன்றியிருக்க வேண்டும். அதற்கும் முன்பு, அமெரிக்கா பேரழிவு ஆயுதங்களை, தற்காப்பு என்ற பெயரில் தயாரித்துக் குவித்தபோதே யோசித்திருக்க வேண்டும். இப்போ, டூ லேட்!

● கல்யாணி பாலு, புதுக்கோட்டை

? ''பகுத்தறிவைப் பின்பற்றி வாழ, மிகுந்த தைரியமும் தன்னம்பிக்கையும் வேண்டும்'' என்று பேசியிருக்கிறாரே கனிமொழி - மஞ்சள் துண்டு அணியும் மூடநம்பிக்கையைக் கைவிடுமாறு தந்தைக்கு அறிவுறுத்துகிறாரா?

! தந்தைக்கும் மகளுக்குமான நல்லுறவை ஏன் பகுத்து அரிய முயற்சி பண்றீங்க...? சும்மா விடுங்க!

● ஆர்.சுப்பிரமணியன், திருவாரூர்

? முல்லைப்பெரியாற்றில் புதிய அணை கட்டுவதற்கான நடவடிக்கை எடுக்குமாறு மத்திய அரசை வலியுறுத்தி, கேரள சட்டசபையில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டுள்ளது குறித்து?

! பழைய அணையை மேம்படுத்துவது பழைய ஒப்பந்தத்தை மீறாது. ஒப்பந்தம் தொடரும். புது அணை எனில், புதிய ஒப்பந்தம் உருவாகும். அதைத் தங்கள் மாநிலத்துக்கு மேலும் சாதகமாக வளைக்கலாம் என்று கேரள அரசு நினைக்கிறது. அடிப்படைக் கோளாறு மொழிவாரி மாநிலப் பிரிவினை.

● டி.ஜெய்சிங், கோயமுத்தூர்

? அமைச்சர்கள் எப்படிப்பட்ட நேர்மையாளர்களாக இருக்க வேண்டும்?

'மாத இறுதியில் என் மனைவியால் பத்து ரூபாய் சேமிக்க முடிகிறது. எனவே என் சம்பளத்தில் பத்து ரூபாயைக் குறையுங்கள்' என்று முன்னாள் பிரதமர் லால்பகதூர் சாஸ்திரி

# பாம்பு..?

* தொடரும்...

...சர்ச்சைகள



சொன்னதாக ஒரு செய்தி உள்ளது. அவ்வளவு நேர்மை அவசியம்.

● **வி.கனிமொழி, ஓசூர்.**

***? ஒரிசா சட்டப் பேரவை நிகழ்ச்சிகளைக் காண நாகம் வந்ததாமே?***

! வந்ததோடு, பயந்துபோய் இரண்டு நாட்களுக்குக் கண்ணாமூச்சி விளையாடியிருக்கு... 'எந்தப் புத்தில் எந்தப் பாம்போ?'ன்னு நினைக்க வைக்குதில்லே!

● **வி.ஆனந்தகிருஷ்ணன், சென்னை-101** ❑

***? நில ஆர்ஜித வழக்குகளில் கூடுதல் தொகை வழங்க உத்தரவிடலாம். அதைத் தவிர்த்துவிட்டு, நீதிமன்றங்கள் இடைக்காலத் தடைகளை விதிப்பதோ நில ஆர்ஜிதத்தையே கைவிடுமாறு உத்தரவிடுவதோ நியாயமா?***

! நில ஆர்ஜித வழக்குகள் இன்று மிக அதிகமாகி வர காரணங்கள் உண்டு. அரசு புறம்போக்கு நிலங்களை ஆக்கிரமிக்க அனுமதிப்பதும், அரசே அவற்றை தனியார் உடைமை ஆக்குவதும் அரசு வசம் உள்ள நிலப்பரப்பு குறைய வழிவகுக்கிறது. நிலத்தின் சந்தை விலை விண்ணை எட்ட, அரசு நிர்ணயிக்கும் நஷ்டஈடு மிகக் குறைவு. விவசாய நிலங்கள் ஆர்ஜிதம் செய்யப்பட்டால் உணவு உற்பத்தி குறையும் என்ற கருத்து; இத்தனைக்கும் மேல் கட்சி அரசியல் புகுந்து விளையாடுகிறது. நீதிபதிகள் இத்தனையையும் யோசித்து முடிவெடுக்க அவகாசம் தேவை. எனவே 'ஸ்டே'!


★ நேர்மைத் திறம்


★ அதிரடி அறிவிப்பு!


★ அவதூறு அலை!

● **என்.ராமசாமி, சென்னை-91**

***? வறுமைக்கோட்டுக்குக் கீழே உள்ள அனைவருக்கும் 2013ம் ஆண்டுக்குள் இலவச மின்சாரம் வழங்கப்படும் என்று மத்திய இணை அமைச்சர் சோலங்கி கூறியிருப்பது நடைமுறை சாத்தியமா?***

! நடைமுறை சாத்தியத்தைப் பற்றி யோசித்து அறிக்கை கொடுக்க அவர் என்ன சோப்ளாங்கியா? சோலங்கி லார்...!

● **சி.கார்த்திகேயன், சாத்தூர்**

***? டயானா, மைக்கேல் ஜாக்ஸன் போன்ற கவர்ச்சிகரமான பிரபலங்களின் மரணத்துக்குப் பின் நிறைய சர்ச்சைகள் ஏற்படுகின்றனவே...?***

! வாழும் காலத்தில் சர்ச்சைகள் சூழ அவர்கள் வாழ்ந்ததால், அவை அவர்கள் இறந்த பிறகும் தொடர்கின்றன; அதிகரிக்கின்றன!

● **கே.பெருமாள், கூனியூர்.** ★

***? உமார் அப்துல்லா ராஜினாமா செய்ய முன்வந்தார். அதனால் அவர் குற்றமற்றவர் எனக் கருதுவது சரியா?***

! தமது பேரில் வழக்கே பதிவாகாத நிலையில், அவதூறு அள்ளித் தெளிக்கப்பட்டதால் நொந்து போனவரின் நடவடிக்கையே பதவி விலகல். அது ஏற்கப்படவில்லை. இருப்பினும், அவதூறும் குற்றச்சாட்டும் தொடர்கின்றன. மொத்தத்தில் அரசியல் நாகரிகம் நாடெங்கும் பலத்த அடி வாங்கி வருகிறது.

| ❑ ரூ. 150/- பரிசு பெறுபவர்: | ★ ரூ. 75/- பரிசு பெறுபவர்: |
|---|---|
| வி.ஆனந்தகிருஷ்ணன், சென்னை-101 | கே.பெருமாள், கூனியூர் |

## களம் காணும்...

# அகில இந்திய காதலர் கட்சி!

**இந்தக் கட்சி போதுமா... இன்னும் கொஞ்சம் வேணுமான்னு, நம்ம ஆளுங்க நொடிக்கொரு கட்சி ஆரம்பிச்சு வெடி வெச்சுக்கிட்டிருக்க, ஆந்திரப் பிரதேசத்துக்காரர் குமார்ஸ்ரீஸ்ரீ, கோடம்பாக்கத்தில் வந்து ஒரு கட்சியை ஆரம்பித்திருக்கிறார். கட்சியின் பெயர் அ.இ.கா.க.!**

**''அதென்ன அ.இ.கா.க?''**

''அது வேற ஒண்ணுமில்லை ஸார். 'அகில இந்திய காதலர் கட்சி'யோட சுருக்கம்தான் 'அ.இ.கா.க!' '' என்று நம்மை அதிர வைத்தார்.

**(யாருக்கோ டஃப் கொடுக்கறது போல இருக்கே!)**

**என்ன சொல்றீங்க... காமெடி கீமெடி பண்ணலியே?**

''ஸார், நான் பாக்கறதுக்குத்தான் தம்மாத்துண்டு சைஸு. ஆனா, களத்துல இறங்கிட்டா அரசியல் பெரிசு!'' என்று பஞ்ச் டயலாக்கில் நம்மைப் பங்க்சராக்கினார்...

**(கட்சி பங்க்சராகாம பிக்-அப் ஆனா சரி...)**

**கட்சி ஆரம்பிச்சு இதுவரைக்கும் என்ன பண்ணியிருக்கீங்க?**

''என்ன ஸார் இப்படிக் கேட்டுடீங்க. உண்மையான(!) '15' காதல் ஜோடிகளைச் சேர்த்து வெச்சிருக்கேன். தினமும் மூணு ஜோடிகளாவது ஃபோன் பண்ணி உதவி கேட்கறாங்க. என்னோட அ.இ.கா.க.வுல ஒரு லட்சம் பேரை உறுப்பினரா சேர்த்திருக்கேன். என்னோட அப்ரோச் பிடிச்சுப்போய் வாலண்டியர்ஸ் சேர்ந்திருக்காங்க...''

**(சேர்ந்துட்டாங்கங்கங்களா...? அய்யோ... அய்யோ...)**

**பிரசாரம், பொதுக்கூட்டம்... எல்லாம் போடுவீங்களா?**



''ஸார், பிரசாரம், விளம்பரம் இதெல்லாம் காதலுக்குத் தேவையில்லை. உண்மையான காதல் எங்க இருந்தாலும் என்னோட சேவைக் கரம் அங்கேயும் நீளும். ஆனால், அ.இ.கா.க.வோட கொள்கைகளை விளக்கி பிட் நோட்டீஸ் கொடுப்பேன். நல்ல ரெஸ்பான்ஸ் ஸார்.''

*(கொள்கை விளக்கமா... தொழிலுக்குப் புதுசு இல்லே... அதான்)*



**அடி ஆத்தி... அது எங்கே?**

''வேறெங்கே ஸார்... இருக்கவே இருக்கு மெரீனா பீச். ஒவ்வொரு நாளும் சாயந்தரத்துல அங்க ஆஜர் ஆயிடுவேன். அங்க வர்ற காதலர்கள்கிட்ட கட்சியோட கொள்கைகளை விளக்கிப் பேசுவேன். என் பேச்சைக் கேட்கறவங்களை கட்சியில உறுப்பினரா சேர்த்துக்குவேன். என் பேச்சைக் கேட்காத காதலர்களை காலம் பார்த்துக்கும்னு விட்டுருவேன்''

*(சாபமெல்லாம் வேண்டாம்... பாவம் புள்ளைங்க)*



**காதல் திருமணம் பண்ணிக்கிட்டவங்க குழந்தைகளுக்கு வேலைவாய்ப்பில் இட ஒதுக்கீடு வேணும்!**

**'காதல்'ங்கற பேர்ல சிலது தப்பா போயிடுதே?**

''உண்மைதாங்க, அவங்களைப் பத்தி எங்ககிட்ட, எந்தத் திட்டமும் இல்லை. தப்பைத் திருத்திக்கிட்டு எங்க ஆதரவைத் தேடி வந்தாங்கன்னா, எதிர்காலத்துல அவங்களுக்கு ஏதாவது நல்ல வழியைக் காண்பிப்போம்!''

*(அநியாயத்துக்கு நல்லவங்களா இருக்கீங்க...)*

**காதலைச் சேர்தது வெச்ச பெற்றோர்கள் கிட்ட அடி... உதை... ஏதாவது?**

''அ.இ.கா.க., சேர்த்து வைக்கும் ஆணுக்கு 21 வயசு, பெண்ணுக்கு 18 வயசு முடிஞ்சிருக்கான்னு முதல்ல செக் பண்ணுவேன். அப்புறம்தான் களத்துல இறங்குவேன். சட்டப்படி போறதுனால என் மேல யாரும் கை வெச்சது கிடையாது. எதிர்காலத்துல அப்படி நடந்தா 'அரசியல்ல இதெல்லாம் சகஜமப்பா'ன்னு போய்க்கிட்டே இருக்கணும். இல்லைன்னா கட்சியோட எதிர்காலம் பாதிக்கும்!''

*(என்ன ஒரு ப்ளானிங்!)*

**'எலெக்ஷன்'னு ஒரு ஏரியா இருக்கே?**

''போன பாராளுமன்றத் தேர்தல்லயே போட்டியிடறதா அ.இ.கா.க.வுக்கு ஐடியா இருந்தது. கடைசி நேரத்துல பொதுக் குழுவுல கட்சிக்கு முதல்ல ஒரு கோடி உறுப்பினர் சேர்க்கணும். அப்புறம்தான் தேர்தல்ல போட்டியிடணும்னு முடி



வெடுத்ததால அந்தத் திட்டத்தைக் கைவிட வேண்டியதா போச்சு.''

**(ஒரு கோடியா... கொஞ்சம் குறைவா தெரியுதே!)**

**எலெக்‌ஷன்ல ஜெயிச்சுருவீங்களோ?**

''ஸார், இந்தியாவோட மக்கள் தொகை 110 கோடி. இதுல முப்பது கோடி பேர் காதலர்கன்னு அ.இ.கா.க. எடுத்த புள்ளி விவரம் சொல்லுது. இவங்களையெல்லாம் கவர் பண்ணிட்டா, நாங்க செல்லும் இடமெல்லாம் ஜெயம்தானே. எழுதி வெச்சுக்கோங்க 2014ல் 15 எம்.பி. ஸீட் லட்சியம்... 10 நிச்சயம்!''

**(2011ல் முதல்வர் எல்லாம் பழைய டயலாக்...)**

**கர்நாடகாவுல ஸ்ரீராம் சேனா அமைப்போட காதலர் தின கலாட்டா?**

''ஸ்ரீராம் சேனாவோட தலைவர் முத்தலிக் ஒரு கட்டைபிரம்மச்சாரி. அவருக்குக் காதலைப் பத்தி என்னங்க தெரியும்? அதனால அந்தக் காதலே அவரை மன்னிக்கணும்... வேறென்ன சொல்ல? ஆனா, அந்த அமைப்பு நமீதா, த்ரிஷா, நயன்தாரா... போன்றவங்க சினிமாவுல கொஞ்சம் கவர்ச்சியா நடிக்கறதால, அவங்களுக்கு எதிரா போராட்டம் பண்ணப் போறதா எனக்கு அரசியல் வட்டாரத்திலருந்து தகவல் வந்தது. அப்படி ஏதாவது நடந்தா நடிகைகளுக்கு ஆதரவா அ.இ.கா.க. களத்தில் குதிக்கும்.''

**(அப்போ தேர்தல் பிரசாரத்துக்கு அவங்க எல்லாரும் வருவாங்க...)**

**இடைத்தேர்தல்ல யாருக்கு உங்க ஆதரவு?**

''எங்கிட்ட யாரும் ஆதரவு கேட்கல. ஆனாலும் காதலை ஆதரிக்கறவங்களை நாங்க ஆதரிப்போம்.'' **(வெளியிலிருந்து ஆதரவா...?)**

**கொள்கைகள்...?**

''நிறைய இருக்கு. ஒண்ணு மட்டும் சொல்றேன். காதல் கல்யாணம் பண்ணிக்கிட்டவங்களோட குழந்தைகளுக்கு, வேலை வாய்ப்புல அரசாங்கம் இட ஒதுக்கீடு பண்ணணும்!''

**(புதுசா இருக்கு...)**



**15 ஸீட் லட்சியம்**
**10 ஸீட் நிச்சயம்**

**உங்களோடது காதல் திருமணமா...?**

''பின்ன... வாழ்ந்து காட்டுறேன். மத்தவங்களையும் வாழ வெக்கறேன்.'' **(யான் பெற்ற இன்பம்...)**

**காதலைப் பத்தி நச்சுன்னு சொல்லுங்க?**

''காதல் - அழகான ஆபத்து.''

**(அடிபட்டா வலிக்காதோ...?)**

**- ராகவ்குமார்**



"என்ன ஸார்! உங்க பையன் கணக்கு புக்கை இப்படி கிழிச்சுக் குதறி வைச்சிருக்கான்?"

"நான்தான் சொன்னேனே... அவன் கணக்குல புலின்னு."

- வ. உஷா

# அறிவு ஆசாரியே கற்பனை கொத்தனாரே..!

"தொகுதிப் பங்கிடு சுமுகமாக முடிந்தது, அடுத்து கோஷ்டிச் சண்டை நடைபெறும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்!"

- ஜீவி





**கற்பனை கொத்தனாரை பேஸ்மெண்டை ஸ்ட்ராங்கா போடச் சொல்லுங்க... இல்லேன்னா பில்டிங் கலகலத்துடும்!**

"இத்தனை டெஸ்ட்டும் கண்டிப்பா பண்ணனுமா டாக்டர்?"

"பின்னே! நீங்க பேஷண்டுதான்னு நான் எப்படித் தெரிஞ்சுக்கிறதாம்?"

- ஜி.லட்சுமிபதி





"தலைவர் ஒரு சிந்தனைச் சிற்பி! எழுத்து என்ஜினியர்! ஞான மேஸ்திரி! அறிவு ஆசாரி! கற்பனை கொத்தனார்!"

"ஓஹோ... இவரு அவரோட சித்தாள் போலயிருக்கு..."

- தஞ்சை தாமு

"எதுக்காக படம் பார்க்க வந்தவங்களுக்கெல்லாம் தூக்க மாத்திரை கொடுக்கறீங்க..."

"இல்லேன்னா பாதியிலேயே எல்லோரும் வீட்டுக்குப் போயிடறாங்களே!"

- டி.சேகர்





"அங்'கம்', வங்'கம்' கலிங்'கம்' இவை என்ன?"

"கோந்து கம்பெனிகள் ஸார்."

- சிவ.இராமலிங்கம்



✱ ரயில் ப்ரியா குழுவினர்



✱ ஏழு நாட்களில்...

# "எங்களைத் திட்டி

"எங்களைப் பற்றி திட்டி எழுதுங்கள், பரவாயில்லை. எங்களுக்குத் தேவை விமர்சனங்கள்தான்" - இப்படி ஒரு வித்தியாசமான கோரிக்கையை வைக்கின்றனர் ரயில் ப்ரியா நாடகக் குழுவினர்.

"ஏன் இந்த ஆதங்கம்?" என்று செவி சாய்க்க க்ரீன் சிக்னல் போட்டதும், "யுவர் அட்டென்ஷன் ப்ளீஸ்" என்று கிளம்பியது ரயில் ப்ரியா நாடகக் குழுவினரின் எக்ஸ்பிரஸ்.

"ஒரு சினிமா வந்தால் அதை விமர்சிக்க பத்திரிகைகள் காட்டும் ஆர்வத்தை ஒரு நாடகத்துக்குக் காட்டுவதில்லையே... அதுதான் எங்கள் ஆதங்கம். எங்கள் நிறைகுறைகளை விமர்சியுங்கள். அப்போதுதான் நாடகங்களும், நாடகக் குழுக்களும் வெற்று நடை போடாமல் வெற்றிநடை போடும்" என்று சூடாகத் தொடங்கினர்.

அது என்ன ரயில் ப்ரியா? 1994ல் ரயில்வேயில் பணிபுரியும் நாடக ஆர்வலர்கள் நால்வருடன் தொடங்கியதுதான் இந்த நாடகக் குழு. இந்தப் பதினைந்து ஆண்டுகளில் இந்தியாவெங்கும் பல்வேறு மாநிலங்களில் வெற்றிகரமாக வலம் வந்திருக்கிறது ரயில் ப்ரியா.

"நாடகம் பற்றிய அடிப்படை விஷயங்கள் கூடத் தெரியாதவங்க,

ஆர்வத்தை மட்டுமே அடிப்படையா வெச்சுதான் இந்தக் குழுவைத் தொடங்கினோம். இதுவரை தமிழ்நாட்டின் மூலை முடுக்குகளிலிருந்து நாடு முழுவதும் பல்வேறு இடங்களில் பதினேழு நாடகங்களை மேடையேற்றியிருக்கிறோம். இதில் நாங்கள் பெருமையாகக் கருதுவது, அந்த நாடகங்கள் அனைத்துமே கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸின் கோடை நாடக விழாவில்

# எழுதுங்க!”

அரங்கேறியிருக்கின்றன. திரை உலகில் கே.பாலசந்தர் கையால் குட்டு பெறுவது போன்ற அதிர்ஷ்டம் இது.

'நாடகக் கலையே மறைந்து வரும் சூழலில் உங்களுக்கு ஏன் இந்த வேலை? உங்கள் நாடகங்களுக்கெல்லாம் கூட்டம் வராது' என எங்களுக்கு ரெட் சிக்னல் போட்டவர்கள் உண்டு. எங்கள் நாடகங்கள் மேடையேறிய இடங்களில் அந்தக் கூற்று பொய்யானது. 2002ல் ஒரு வாரம் முழுக்க நாடகங்கள் நடத்தினோம். 250 பார்வையாளர்களோடு தொடங்கிய அந்நிகழ்வு, ஏழாவது நாளில் 800 ரசிகர்களை ஈர்த்திருந்தது.

நல்ல நாடகங்களுக்கு மக்கள் ஆதரவு எப்போதுமே உண்டு என எங்களுக்கு உணர்த்தியது அந்த ஏழு நாட்கள்தான்'' என்று உற்சாகமாய் ப்ரேக் போட்டனர். வெற்றிப் பயணம் தொடரட்டும் என, ஸ்டேஷன் மாஸ்டரின் விசிலை வாங்கி ஊதிவிட்டு விடைபெற்றோம்.

**- நளினி சம்பத்குமார்**

... ரசிகர்கள்!



... என்னுறு ...





**நாடகம்**

# மிச்சம் தந்த அழகு!

**ஊ**ரைச் சுற்றிய வயல்வெளி. ஊருக்குள்ளே தென்னையும் மாவும் கலந்த தோப்புகள். தோப்புகளுக்குள் ஆங்காங்கு சிதறிக் கிடக்கும் சொற்ப வீடுகள். இவற்றின் கலவைதான் நரியங்காடு. நான் இப்போது அந்த ஊருக்குத்தான் போய்க் கொண்டிருக்கிறேன். பெயர் ராசியோ என்னவோ, அதிகம் பேருக்கு அந்தக் கிராமத்தின் விலாசம் தெரிய வரவில்லை. இப்போது எனக்கேகூட அவ்வூரின் பெயரைச் சொல்லி பஸ் விவரம் கேட்கத் தயக்கம்தான். எடுப்பான ஆடையுடன் மிடுக்காய்த் தோற்றமளிக்கும் அதிகாரியான நான், நரியங்காட்டுக்கு எத்தனை மணிக்கு பஸ் என்று கேட்பது அத்தனை பொருத்தமாக இருக்காது என்றே எண்ணினேன்.

எனவே பேருந்தின் மேல் விளிம்பில் அறிவிக்கப்பட்டுள்ள ஊர்ப் பெயர்களைக் கவனித்தேன். துறவிக்காடு, ஆவணம், ஆம்பலப்பட்டு, ஒட்டங்காடு, குருவிக்கரம்பை என ஏதேதோ ஊர்ப்பெயர்கள். ஆனால் நரியங்காட்டை எந்தப் பேருந்திலும் காண முடியவில்லை.

இப்படி பெயர் சொல்லக்கூடத் திராணியற்ற அந்த ஊரில்தான் என் அத்தை இருக்கிறாள். சின்ன வயசில் என்னைச் சீராட்டி மகிழ்ந்த பெரிய மனுஷி. தொடர்பு அற்றுப்போய் பல மாமாங்கமாகிவிட்டது. எப்போதாகிலும் பணி நிமித்தம் இந்தப் பக்கம் வர நேர்ந்தால், அத்தையை எட்டிப் பார்த்துவிட்டு வருவேன். இந்தத் தடவை மன்னார்குடியில் ஒரு சின்ன வேலை. முடித்துவிட்டு பட்டுக்கோட்டைக்கு வந்தேன். இங்கிருந்து சுமார் பதினாறு கிலோ மீட்டர் தொலைவில்தான் நரியங்காடு.

**ஊ**ர்ப் பெயரைத் தேடி என் முகம் வாடியதை அத்தம்பதிகள் கவனித்திருக்க வேண்டும். பச்சாதாபத்துடன் ''சார்... எந்த ஊருக்குப் போகணும்?'' என்று விசாரித்தார்கள்.

''நரியங்காடு'' என்றேன்.

''நாங்களும் நரியங்காடுதான் போறோம். இரண்டு பத்துக்கு ஐந்தாம் நம்பர் பஸ் வரும். சேர்ந்து போகலாம்...'' கணவனும் மனைவியும் மாறிமாறி தகவல் சொன்னார்கள். அந்தப் பெண்ணின் கையில் ஆறு மாத ஆண் குழந்தை - அதுதான் அவர்களின் முதல் குழந்தையாய் இருக்க வேண்டும். ''இப்ப மணி என்னங்க ஐயா?''



''ஒண்ணு இருபது'' என்ற எனக்கு, காத்திருக்கக் கஷ்டமாக இருந்தது. ''அதுக்கு முன்னே வேறு பஸ் இல்லையா?''

''அதுக்கு முன்னே...'' சற்று யோசித்தான், அந்த ஆள். ''இரண்டு மணிக்கு புதுக்கோட்டை வண்டி இருக்கு சார். அதிலே போனால் திருச்சிற்றம்பலத்திலே இறங்கி நரியங்காட்டுக்கு ஆட்டோ வைச்சுப் போகணும். முப்பது ரூபாய் கேட்பாங்களே...''

''பரவாயில்லை. நான் அதிலே போறேன்.''

''அப்படின்னா ஒன்னு பண்ணுங்க. இது டவுன் பஸ் நிற்கிற இடம். வெளியூர் பஸ் அந்தப் பக்கமாத்தான் வரும். அங்கே போய் நில்லுங்க.''



நான் திரும்பினேன். அவன் மனைவி குறுக்கிட்டாள். ''வேண்டாம் சார். அந்த பஸ்ஸூம் ஐந்தாம் நம்பரும் ஒண்ணாத் தான் கிளம்பும். நீங்க இங்கேயே இருங்க. ஐந்தாம் நம்பரிலே போனால் உங்களுக்கு முப்பது ரூபாய் மிச்சம்.''

''சார் அவசரமா போகணுங்கறார், தேவி.'' கண்டனத் தொனியில் மனைவியைப் பார்த்தான், அவன்.

''பத்து நிமிஷத்திலே ஒண்ணும் ஆயிடாது. முப்பது ரூபாய் என்றால் சும்மா இல்லை. மூணு நோட்டு. மூணு நாள் பொழுது போகும். தெரியுமா?''

நான் சிரித்துக்கொண்டே, ''பரவாயில்லைம்மா. அவர் சொன்னது மாதிரி நான் அவசரமாப் போகணும், புதுக்கோட்டை பஸ்ஸூக்கு

முயற்சி பண்ணிப் பார்க்கிறேன்'' என்று நகர்ந்தேன்.

மணி இரண்டு பத்து. இன்னும் புதுக்கோட்டை பஸ் வரக் காணோமே. நான் புலம்பிக்கொண்டிருந்தபோது, டவுன் பஸ் பகுதியிலிருந்து அந்த ஆள் ஓடி வந்தான். ''சார்... சார்... ஐந்தாம் நம்பர் பஸ் வந்துடுச்சு. வாங்க அதிலேயே போயிடலாம்.''

நான் அவ்வாறே செய்தேன்.

அந்தப் பெண்ணிடம் சந்தோஷப் பெரு வெள்ளம். பின் சீட்டிலிருந்த என்னைத் திரும்பிப் பார்த்துச் சொன்னாள். ''புதுக்கோட்டை பஸ் இன்னும் வரலை தானே சார். வராதுன்னு எனக்குத் தெரியும். அதனாலேதான் இவரை விட்டு உங்களைக் கூட்டிவரச் சொன்னேன்...''

பஸ் புறப்பட்டது.

நரியங்காட்டில் என்னையும், அவர்களையும் தவிர வேறு யாரும் இறங்கவில்லை. அவர்கள் தெற்கு நோக்கி நடக்க நான் நேர் கிழக்காகப் பிரிந்தேன்.



## 'கிராமம் ஊரளவில் மட்டுமல்ல, மனசளவிலும் அழகாகத்தான் இருக்கிறது...'

''இப்படி ஐந்து ரூபாயிலே நரியங்காட்டுக்கு வர்றதை விட்டுட்டு எதுக்கு ஆட்டோவுக்கு முப்பது ரூபாய் கொடுக்கணும்...'' என்று பெருமைக் குரலில் அந்தப் பெண் சொல்ல,

''நெசம்தான் தேவி. நீ சொன்ன மாதிரியே புதுக்கோட்டை பஸ் லேட்டாய்த்தான் வரும்போல'' என்று ஒத்தூதும் பாடலாக அவளது கணவன்.

''அதுமட்டும் இல்லைங்க. புதுக்கோட்டை பஸ் வந்துறக் கூடாது. சாருக்கு முப்பது ரூபாய் தண்டம் வைக்கக் கூடாதுன்னு நான் சாமி கிட்டே வேண்டிக்கிட்டே இருந்தேன்... தெரியுமா...?''

தம்பதிகளின் வெற்றிக் களிப்பு காற்றில் மிதந்து வந்தது. 'யாரோ ஒரு வழிப்போக்கனான எனக்கு முப்பது ரூபாய் மிச்சப்படுத்திக் கொடுத்ததில் அந்தப் பெண்ணுக்குத்தான் எத்தனை சந்தோஷம்?' நான் சிலிர்த்தேன். 'கிராமம் - ஊரளவில் மட்டுமல்ல, மனசளவிலும் அழகாகத்தான் இருக்கிறது...'



''எங்க கம்பெனியோட இந்த டானிக்கை குடிச்சா ரெண்டே மாசத்துல வெயிட் ஏறிடும் டாக்டர்!''

''அப்ப முதல்ல நீங்க இதை ரெண்டு மாசம் குடிச்சிட்டு அப்புறமா என்னை வந்து பாருங்க!''

- வெ.சீதாராமன்

# எச்சில் அர்த்தங்கள்

வே.ராமசாமி



பிடிக்காதவன் எனில்
துஷ்டி வீடென்றாலும்
துப்பிக்காட்டுகிறார்கள்
ஒன்றும் தெரியாததுபோல்

அருள் கொண்டு சாமி
ஆடி வருபவன்கூட
பகையாளி வீடெதிரே
உமிழ்ந்து செல்கிறான்
ஞாபகம் வைத்து

மகளைக் காதலிப்பவன்
முகத்தெதிரே துப்பி
ஆவியுமில்லாமல்
அருவமுமில்லாமல்
ஒரு காதலை முறிக்கிறாள்
தாயமானவள்

எச்சில் சோற்றை
மிச்சமாக்கிய
புது மாப்பிள்ளை -

அது
கழிவுநீர்ப் பானை
போனது கண்டு
புழுங்கித் தவிக்கிறார்
மாமியார் வீட்டில்

த்தூ த்தூவென்று
தேன் குளவியை
விரட்டுவது போல்
தூற்றிச் சண்டையிட்டவர்,
பிற்பாடு ஒருநாள்
கிடாவெட்டிப் பொங்கலிட
கிளம்புவர் கூட்டமாக

ஊரின் முகத்தில்
துப்பிக்காட்ட
முடியாதவன்தான்
நைசாகத் துப்புகிறான்
நல்ல தண்ணிக் கிணற்றின்
நடுவில் புளிச் என.

# ''அந்த ஃபேன் நிக்கும்போது இவனோட உயிரும் போயிடுது''



**'கடைசி யுத்தம்' குறும்படத்தின் மூலம் பலரின் கவனத்தைக் கவர்ந்துள்ளார் விஜயசேகர். அடுத்து 'சரஸ்வதி மேல்நிலைப்பள்ளி' திரைப்படத்தை இயக்கும் பரபரப்பில் இருக்கிறார்.**

**'கடைசி யுத்தம்' என்ன கதை?**

''அரசாங்க வேலை கிடைக்கணுங்கறதுக்காகவே போராடற பட்டதாரி இளைஞன். ராஜா, சென்னைக்கு வந்து ஒரு ஹோட்டல்ல சர்வரா வேலை பாக்கறான். அன்றைக்கு அவனுடைய பிறந்த நாள். அன்றோட கவர்ன்மெண்ட் வேலைக்கான வயது அவனுக்கு முடிஞ்சு போயிடுது. இனிமே இவனுக்கு அரசாங்க வேலை கிடைக்காதுங்கறது தெளிவா தெரிஞ்சிடுது. வெறுப்புல, அம்மாவுக்கு ஒரு கடிதம் எழுதி வைச்சுட்டு, ஜன்னல் கதவையெல்லாம் சாத்திட்டு, கதவை உள்பக்கமா பூட்டி, சாவியைத் தூக்கி வெளிய எறிஞ்சுட்டு, விஷத்தைக் குடிச்சிட றான்.

அப்போ வெளியே ஒரு குரல் கேக்குது, 'சார் போஸ்ட்!'னு. கதவு இடுக்கு வழியா ஒரு லெட்டர் வந்து விழுது. அது அவனுக்கு வந்த ஒரு அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டர். கத்த றான்; கதர்றான். ஜன்னல் வழியா பாக்கறான். ஒரு ஆள் சைக்கிள்ல போறார். கூப்பிடறான். ஆனா பக்கத்துல ஓடுற ரயில் சத்தத்துல அவருக்குக் காது கேக்கல. இன்னொரு ஆள், அந்தவழியா நடந்து வந்தவன், இவன் தூக்கி எறிஞ்ச சாவியை எடுத்துப் பாத்துட்டு, யாருதோன்னுட்டு அவன் பாட்டுக்குப் போயிடறான். ராஜாவால இப்போ பேச முடியல. விஷம் வேலை செய்ய ஆரம்பிச்சிடுது. பதற்றத்துல பக்கத்துல இருக்கிற ஒரு டேபிள் ஃபேனைத் தட்டி விட்டுர்றான். இவனும் கீழ விழுறான். அந்த ஃபேன் நிக்கும்போது, இவனோட உயிரும் போயிடுது. எந்தக் காரியத்திலயும் அவசரமா முடிவெடுக்கிறது தப்புன்னு சொல்றதுக்காகத்தான் இந்தப் படத்தை எடுத்தேன்.''

இப்படி குறும்படம் பண்ணணும்னு உங்களுக்கு ஏன் தோணிச்சு?

''ஒரு சினிமாவை இயக்குறதுக்குத் தகுதி இருக்கான்னு என்னை நானே சுய மதிப்பீடு பண்ணத்தான் இந்தக் குறும் படத்தை எடுத்தேன். ஒரு இயக்குநரோட பார்வையில ஒளிப்பதிவு, நடிப்பு,



எடிட்டிங் இதெல்லாம் எப்படி இருக்கணும் என்பது ஒரு குறும்படத்தை எடுத்துப் பாத்தாதான் தெரியும்.''

உங்களோட திரைத் துறை முன் அனுபவம் என்ன?

'' 'பிறந்தநாள்'னு ஒரு படம். அதோட இயக்குநர் சரவணன்கிட்ட உதவி இயக்குநரா வேலை பார்த்தேன். அந்தப் படத்துலதான் நடிகர் பிரகாஷ்ராஜ் அறிமுகமானார். அப்புறம் 'ப்ளஸ்டூ'ன்னு ஒரு படத்துல உதவி இயக்குநரா இருந்தேன். கொஞ்ச நாள் எழுத்தாளர் பட்டுக் கோட்டை பிரபாகர்கிட்ட திரைக்கதை உதவியாளரா வேலை பார்த்திருக்கேன்.''

குறும்படங்களோட எதிர்காலம் எப்படி இருக்கும்?

''நல்லா இருக்கும். குறும்படங்களுக்காகவே உலகம் முழுக்கத் தனி அமைப்புகள் நிறைய வந்துடுச்சு. இப்போ மிகக் குறைந்த செலவுல, நல்ல கருத்துகளைக் குறும்படமா தர முடியுங்கற நம்பிக்கை நிறைய பேருக்கு இருக்கு. செல்ஃபோன்ல கூட குறும்படம் எடுத்துடறாங்க. ஆனா, இதுக்கு ஊடகங்களோட ஒத்துழைப்பும் ரொம்ப அவசியம்.''

குறும்படம் எடுக்கறதுனால ஏதாவது ஆதாயம் இருக்கா?

''பண ரீதியா ஒண்ணும் இல்லன்னுதான் சொல்லணும். சில அமைப்புகள்ல, நல்ல குறும்படங்களுக்குப் பரிசு கொடுக்கறாங்க. ஆனா, அது பெரிய தொகை இல்ல. அது எல்லாருக்கும் கிடைக்கறதும் இல்ல. ஆனா, ஒரு குறும்பட இயக்குநருக்கு அவங்க எடுத்த குறும்படமே ஒரு அடையாளமா அமையும். இப்படிப் பார்த்தா ரொம்பப் பெரிய ஆதாயம்.''

# கதவு இடுக்கில் ஓர் உயிர்!

- பாலு சத்யா

**டா**க்டர் சதுர்வேதி செல்ஃபோனில் பேசிக்கொண்டிருந்தார்.

''சாதுர்யா...! நீ சொல்ற மாதிரி டாக்டர்கள் இப்போதெல்லாம் சர்வீஸ் மைண்ட்டடாய் இல்லை என்பதை ஒத்துக்கிறேன். அவங்களுக்கும் நிறைய செலவுகள் இருக்கு. அதையெல்லாம் மீட் பண்ண வேண்டாமா? என்னோட ஹாஸ்பிடலையே எடுத்துக்க. நிறைய ஃபீஸ் வாங்கறோம். அதுக்காக டாக்டர்களிடம் மனிதாபிமானம் இல்லைன்னு சொல்லாதே...! என்னைப் பொறுத்தவரைக்கும் டாக்டர்கள் இரண்டாவது கடவுள்...''

''அய்யோ...! போதும் டாக்டர்... புல்லரிக்குது. எனக்கு வர்ற வாரம் உங்ககிட்டே ஒரு அப்பாயின்மெண்ட் வேணும். முதுகு வலி... அதுக்குத்தான் போன் பண்ணினேன்...!''

''வாம்மா பார்த்துடலாம். பை..த...பை எனக்கு ஏதோ எமர்ஜென்ஸி கால்''

''நீங்க அதைப்பாருங்க டாக்டர். நானும் அவசரமாய் க்ரைம் ப்ராஞ்ச் போகணும்!'' மறுமுனையில் சாதுர்யா செல்ஃபோனை அணைத்து விட, டாக்டர் சதுர்வேதி எமர்ஜென்ஸி இண்டர்காம் ரிஸீவரை எடுத்தார். மறுமுனையில் ட்யூட்டி டாக்டர் பர்வதராஜன் பேசினார்.

''டாக்டர்! ஒரு வயசான சீக்கியப் பெரியவர். பேர் ஜக்பீர் சிங். ஹரியானா ஸ்டேட்டிலிருந்து ஃபேமிலியோடு டூர் வந்த இடத்தில் ஹார்ட் அட்டாக். ஸீம்ஸ் டு பி மாஸிவ்.''

''ஐ.ஸி. கொண்டு போயிட்டீங்களா?''

''கொண்டு போயிட்டேன் டாக்டர்.''

''வெண்டிலேட் பண்ணுங்க. ஐயாம் கம்மிங்.''

டாக்டர் சதுர்வேதி நாற்காலியைத் தள்ளிக் கொண்டு பதற்றமாய் எழுந்தார். இரண்டு நிமிட வேக நடை. ஐ.ஸி. யூனிட் வாசலில் ஒரு சீக்கியக் குடும்பம் கண்களில் நீரும் கவலையுமாய்த் தெரிந்தது. ஒரு வயதான பெண், மூன்று இளைஞர்கள், இரண்டு இளம்பெண்கள், எட்டு வயதில் ஒரு சிறுவன், ஆறு வயதில் ஒரு சிறுமி.

இளைஞர்களில் உயரமாய் இருந்த ஒருவன் டாக்டரை நெருங்கி, தெளிவான ஆங்கிலத்தில் பேச ஆரம்பித்தான்.

''டாக்டர்! என்னுடைய பெயர் கேசர் சிங். உள்ளே அட்மிட்டாகியிருப்பது என்னோட அப்பாதான். அவருக்கு வயது எழுபத்தேழு. இது நாள் வரைக்கும் அவருக்கு எந்த ஒரு ஹெல்த் ப்ராப்ளமும் வந்தது இல்லை. எப்படியாவது என்னோட அப்பாவை நீங்கதான் காப்பாத்திக் கொடுக்கணும்.''

''சரி...! தைரியமாய் இருங்க...''





# இரண்டாவது கடவுள்!

சதுர்வேதி அந்த இளைஞனைத் தட்டிக் கொடுத்துவிட்டு ஐ.ஸி. யூனிட்டுக்குள் போனார்.

உள்ளே ஏ.ஸி.யின் குளிர் உறைந்து போயிருக்க அந்த சீக்கியப் பெரியவர் மல்லாந்து தெரிந்தார். வெண்டிலேஷன் அவரைச் சீரான சுவாசிப்பில் வைத்து இருந்தது. அவரைப் பரிசோதித்துப் பார்த்துக் கொண்டு இருந்த ட்யூட்டி டாக்டர் பர்வதராஜன், சதுர்வேதியைப் பார்த்ததும் அருகே வந்தார்.

''பயப்படற அளவுக்கு ஒண்ணுமில்லை டாக்டர். மைல்ட் அட்டாக். பல்ஸ் கொஞ்சம் 'லோ'வாய் இருந்தது. இஞ்செக்ஷன் 'ஃபோர்ட்டின்' போட்டிருக்கேன்... பட்... மறுபடியும் அட்டாக் வந்தா, வீ... ஆர்.. ஹெல்ப்லெஸ்...''

சதுர்வேதி அந்த சீக்கியப் பெரியவரைச் சோதித்துப் பார்த்துவிட்டு பர்வதராஜனிடம் நிமிர்ந்தார். ''ட்ரீட்மெண்ட்டை கண்டினியூ பண்ணுங்க. பேஷண்ட் வெளி மாநிலத்தைச் சேர்ந்தவர். நம்ம ஹாஸ்பிடல் ஃபார்மாலிடீஸ் மற்ற விவரங்கள் எல்லாத்தையும் சொல்லிடுங்க. அப்புறம் ஏதாவது பிரச்னை பண்ணப் போறாங்க... மொதல்ல ஒரு அமௌண்ட்டை கேஷ்ல கட்டச் சொல்லுங்க...''

சதுர்வேதி சொல்லிவிட்டு ஐ.ஸி. யூனிட்டை விட்டு நகர்ந்துவிட, பர்வதராஜன் யூனிட்டுக்கு வெளியே நின்றிருந்த சீக்கியக் குடும்பத்திடம் வந்தார்.

''பெரியவர்க்கு மூத்த மகன் யாரு?''

''நான்தான் டாக்டர்...'' கேசர் சிங் முன்னால் வந்தான்.

''என் கூட வாங்க... ப்ளீஸ்...''

பர்வதராஜன் சொல்லிவிட்டு நடக்க ஆரம்பித்துவிட கேசர்சிங் பின்தொடர்ந்தான்.

ராஜேஷ்குமார்

நீள வராந்தாக்களில் சில நிமிஷ நடை. டாக்டர் பர்வத ராஜனின் அறை வந்தது. எதிர் எதிர் நாற்காலிகளில் உட் கார்ந்தார்கள்.

''சொல்லுங்க டாக்டர்.''

''இந்த ஹாஸ்பிடல் கொஞ்சம் காஸ்ட்லி டைப். ஃபீஸ் அதிகப்படியாய் கட்ட வேண்டியிருக்கும்.''

''நோ ப்ராப்ளம் டாக்டர்''

''இப்போ ஒரு டென் தௌஸண்ட் கேஷ் கட்டி டுங்க. அப்புறம் உங்க ஃபாதர்க்குத் தேவைப்படற ட்ரீட்மெண்டைப் பொறுத்து நீங்க பணம் கட்ட வேண்டி யிருக்கும்.''

''டா...க்...ட...ர்...! நான் ஒரு விஷயத்தை இப்ப உங் களுக்குச் சொன்னா அது அதிர்ச்சியாய் இருக்கும். என்னோட ஃபாதரை இந்த ஹாஸ்பிடலிலிருந்து உயி ரற்ற உடலாய்த்தான் என் னோட ஊருக்குக் கொண்டு போக விரும்பறேன்.''

பர்வதராஜன் அதிர்ந்து போய் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''வாட் நான்சென்ஸ் யூ ஆர் டாக்கிங்...?''

''என்னோட அப்பா நல்ல வர் கிடையாது. வாலிப வய தில் பல பெண்களோட வாழ்க்கையைப் பாழ்படுத்தி அவங்களைத் தற்கொலை பண்ண வெச்சிருக்கார். எல் லாத்துக்கும் மேலாக ஒரு கொலை வழக்கில் ஏழு வருஷம் சிறைத் தண்ட னையை அனுபவித்துவிட்டு வெளியே வந்தவர். அப்பாவுக்கு சட்ட விரோதமான மனைவிகள் மூணு பேர். அவங்களுக்குப் பிறந்த குழந்தைகள் ஏழு பேர். அப்பாவுக்கு சட்ட ரீதியான மனைவி என்னோட அம்மா மட்டுமே! அவரோட உண்மையான வாரிசுகள் நாங்க மூணு பேர் மட்டும்தான். சொத்துக்கள் எல்லாமே எங்க மூணு பேருக்குத்தான் சேரணும்ன்னு அப்பா உயில் எழுதி வெச்சிருக்கார். இதைத் தெரிஞ்சுக்கிட்ட அந்த சட்ட விரோத வாரிசுகள், சொத்துக்களில் தங்களுக்கும் பங்கு இருக்கிற மாதிரி உயிலை மாத்தி எழுதும்படி கட் டாயப்படுத்தறாங்க. மொதல்ல மாட் டேன்னு சொன்ன அப்பா, இப்ப கொஞ்ச நாளா உயிலை மாத்தி எழுதினால் என்ன என்கிற மாதிரி யோசனை பண்ண ஆரம்பிச்சிருக்கார். அவரோட எண்ணத்துக்கு நாங்க எதிர்ப்பு தெரிவிச் சோம். அவர் அதைப் பொருட்படுத்தலை. ஊருக் குப் போனதும் அவர் உயிலை மாத்தி எழுத வாய்ப்பு இருக்கு... அத னால...''

''அதுக்காக அவரைக் கொலை பண்ணச் சொல் றீங்களா?''

''கொலை பண்ணச் சொல்லலை டாக்டர். அவ ருக்கு ஃபர்தராய் ட்ரீட்மெண்ட் கொடுக்காம விட்டுடுங்க... அது போதும். இந்த உதவியை மட்டும் நீங்க பண்ணினா உங்களுக்கு ஐந்து லட்சம் தர்றேன். இந்த வேலைக்கான அட்வான்ஸ் ரெண்டு லட்சத்தை இப்பவே நீங்க வாங்கிக்கலாம்'' - சொன்ன கேசர் சிங், தன் கையோடு கொண்டு போயிருந்த லெதர் பேக்கைப் பிரித்து ஆயிரம் ரூபாய் நோட்டுக் கட்டுகள் இரண்டை எடுத்து வைத்தான்.

பர்வதராஜன் மிரண்டு



போவவராய் எழுந்தார்.

''நோ...! டாக்டர் தொழில் ஒரு நோபிள் ப்ரொஃபஷன். அது உயிரைக் காக்கிற தொழில். உன்னோட அப்பாவைக் காப்பாத்தி அனுப்பறது மட்டும்தான் இப்போதைக்கு என்னோட வேலை. அதுக்கப்புறம் வெளியே போய் நீ உன்னோட அப்பாவை என்ன பண்ணிக்கிட்டாலும் எனக்குக் கவலையில்லை. மொதல்ல பணத்தை எடுத்துக்கிட்டுக் கிளம்பு...!''

''ஸாரி... டாக்டர்...!''

''இட்ஸ் ஓ.கே...! என்ன இருந்தாலும் அவர் உன்னைப் பெத்தவர். எந்தப் பிரச்னைக்குமே பேச்சுவார்த்தைதான் தீர்வு. அவர்கிட்டே உட்கார்ந்து பேசுங்க.''

''எக்ஸ்ட்ரீம்லி ஸாரி டாக்டர்... நான் பண்ண இருந்தது எவ்வளவு பெரிய தப்புன்னு இப்பத்தான் எனக்குப் புரியுது. அப்பாவோட உடம்பு குணமானதும் நான் அவர்கிட்டயே பேசிப் பார்க்கிறேன்.''

''பேசுங்க... கண்டிப்பா நல்ல முடிவு கிடைக்கும்'' டாக்டர் பர்வதராஜன் எழுந்து கொண்டார்.

**ம**றுநாள் காலை ஆறுமணி.

சூரியன் கண் விழிக்காத அந்நேரத்துக்கே டாக்டர் சதுர்வேதி ஹாஸ்பிடலில் இருந்தார். ஜெனரல் 'ரவுண்ட்ஸ் அப்'பை முடித்துக் கொண்டு ஐ.ஸி. யூனிட்டை நெருங்கினார். யூனிட் வாசலில் சீக்கியக் குடும்பம் காத்திருந்தது.

கேசர் சிங் பக்கத்தில் வந்தான்.

''குட் மார்னிங் டாக்டர்...''

''நீங்க மட்டும் இப்போ உள்ளே வந்து அப்பாவைப் பாருங்க. மத்தவங்க சாயந்திரம் பார்க்கட்டும்.''

டாக்டர் சதுர்வேதி கேசர் சிங்கை அழைத்துக் கொண்டு ஐ.ஸி. யூனிட்டுக்குள் நுழைந்தார்.

நடக்க நடக்க சதுர்வேதி கேட்டார்.

''என்ன கேசர் சிங்... அப்பாவோட கதையை இதே ஐ.ஸி. யூனிட்டுக்குள்ளே முடிச்சிடலாமா...?''

''டா...க்...ட...ர்...''

''எனக்கு எல்லாம் தெரியும்... இந்த ஹாஸ்பிட்டல்ல யார் எந்த ரூமிலிருந்து யாரோடு பேசினாலும், அந்த அறையில் பதிக்கப்பட்டு இருக்கிற மைக்ரோ ரிஸீவர் மூலமாய் என் வீட்டுக்கு விஷயம் வந்துடும். உன் அப்பாவோட விஷயத்தில் நீ எடுத்த முடிவுதான் சரி... ஒரே ஒரு ஊசி போட்டா போதும்... சாயந்தரத்துக்குள்ளே அவருக்கு இன்னொரு அட்டாக் வந்து இயற்கையான முறையில்

**சாதுர்யா பேசறேன்... நான் பிரதாப்பை விசாரிக்கும்போது அவனிடமிருந்து சென்ட் மணம் வீசியது. ராஜ்பாபுவின் உடலருகே சென்று பார்த்தபோது வாசனை இல்லை. அதே சமயம் ராஜ்பாபுவின் செல்ஃபோனில் பிரதாப் உபயோகித்த சென்ட் மணம் இருந்தது. அதனால் சந்தேகமடைந்து பிரதாப்பை லாக்கப்பில் வைத்து கவனித்ததில் உண்மைகள் வெளியாகின. நான் கொடுத்த க்ளூவை வைத்து இதைச் சரியாக யூகித்து எழுதியவர்களில் பரிசு பெறும் ஐந்து பேரின் விவரம் வட்டமேஜை பகுதியில்...**

உயிரை விட்டுடுவார். என்ன சொல்றே?''

கேசர் சிங்கின் கண்களில் பரவசம்.

''உடனே ஊசி போடுங்க டாக்டர். அஞ்சு லட்சம் குடுத்துடறேன்.''

''என்னோட ரேட் பத்து லட்சம்!''

''தர்றேன் டாக்டர்''

''ட்யூட்டி டாக்டர் பர்வதராஜன் அவ ரோட ரூம்ல இருப்பார். போய் பணத்தைக் கொடுத்துட்டு வா. உன்னோட அப்பா வுக்கு அமரர் பதவி கிடைச்சிடும்...''

கேசர் சிங் ஒரு துள்ளல் நடையோடு கிளம்பிப் போக, சதுர்வேதி ஐ.ஸி. யூனிட் டின் உட்புறத்தை நோக்கிப் போனார். சீக்கியப் பெரியவரின் அறைக்குள் நுழைந் தார்.

பெரியவர் சோர்ந்த கண்களோடு வெண்டி லேட்டர் உதவியால் சுவாசித்துக் கொண் டிருந்தார்.

நர்ஸுகள் யாரும் பக்கத்தில் இல்லை என்பதை உறுதிப்படுத் திக் கொண்ட சதுர்வேதி, தன் செல் ஃபோனை எடுத்து ட்யூட்டி டாக்டரைத் தொடர்பு கொண்டார்.

''என்ன பணம் வந்து சேர்ந்ததா?''

''சேர்ந்தது டாக்டர்''

''எவ்வளவு?''

''பத்து...''

''ஓ.கே.! போட்டுடலாமா...?''

''போட்டுடலாம் டாக்டர்''

சதுர்வேதி செல்ஃபோனை அணைத்து கோட் பாக்கெட்டுக்குள் போட்டுக் கொண்டு, அடுத்த பாக்கெட்டில் இருந்த அட்ரினலின் இன்ஜெக்ஷன் பாட்டி லையும் டிஸ்போஸபில் ஊசியையும் எடுத்தார். அட்ரினலினை ஸிரிஞ் சில் ஏற்றிக்கொண்டு சீக் கியப் பெரியவரை நெருங்கினார். கையில் இருந்த நரம்பைக் கண்டு பிடித்துச் செலுத்த முயன் றார்.

**"டாக்டர் தொழில் ஒரு நோபிள் ஃப்ரொஃபஷன். அது உயிரைக் காக்கிற தொழில்."**

''ஒரு நிமிஷம் டாக்டர்''

திடீரென்று தமக்குப் பின்னால் எழுந்த குரல் கேட்டுத் திரும்பினார்.

புன்னகையோடு சாதுர்யா நின்றிருந் தாள். அவளுக்கு இரண்டு பக்கமும் ஃபாரன்ஸிக் அதிகாரிகள் உயர உயரமாய்த் தெரிய - சாதுர்யா கண்ணைக் காட்ட, அவர் கள் இருவரும் டாக்டரை நெருங்கி அவர் கையில் இருந்த இன்ஜெக்ஷனைப் பறித் தார்கள். ஒரு புழுவைப் பார்க்கிற பார்வை யோடு சாதுர்யா சதுர்வேதியை ஏறிட்டாள்.

''உயிரைக் காப்பாற்ற வேண்டிய நீங் களே ஒரு உயிரை எடுக்க நினைப்பது எந்த வகையில் நியாயம் டாக்டர்...? உங்களைக் கைது செய்யறதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை...!''

டாக்டர் சதுர்வேதி முகம் கறுத்து, தலை குனிந்தார். ❑

## துப்பறியும் போட்டி-6



**ச**ரியான நேரத்தில் சாதுர்யா இங்கே வந்து கொலையைத் தடுத்தது எப்படி? சதுர்வேதியின் இந்தத் தில்லுமுல்லு அவளுக்கு எப்படித் தெரியும்?

**உ**ங்கள் கற்பனையைத் தட்டி விட்டு சரியான பதிலை போஸ்ட் கார்டில் எழுதி அனுப்புங்கள். துப்பறியும் போட்டி-6 என்று குறிப்பிட்டு கல்கி முகவரிக்கு அனுப்புங் கள். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**கடைசித் தேதி: 12.08.09**

## நூல் அறிமுகம்




சத்தியமூர்த்தி கடிதங்கள் - பாகம் 1
தொகுப்பு : கே.வி.ராமநாதன்
தமிழில் : சாருகேசி, வெளியீடு: விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 600 002. விலை ரூ.165/-

ஒரு தேச பக்தரின் பார்வையில் இந்திய சுதந்திரப் போராட்ட வரலாற்றை அணுகும் நூல். அதற்குக் கருவியாகியிருப்பவை தீரர் சத்தியமூர்த்தி எழுதிய, அவருக்கு எழுதப்பட்ட கடிதங்கள். நூலில் இடம்பெற்றுள்ள கடிதங்களின் காலம் 1908 முதல் 1937 வரை. விடுதலைக் களத்தின் வலி மிகுந்த போராட்டங்களை இத்தலைமுறையினர் வேகமாக மறந்து வரும் சூழலில் அதை நினைவூட்டிக் கொள்ளவும், இளைய தலைமுறையினருக்கு தேசத்தின் விடுதலை வரலாற்றை அறிமுகப்படுத்தவும் உதவும் நூல்.




## சுடச் சுட மழை



பெய்து தீர்ந்த பெருமழை
ஆசிரியர் : நாவல் குமாரகேசன்
வெளியீடு : நறுமுகை, 29/35, தேசூர் பாட்டை, செஞ்சி - 604 202.
விலை ரூ.35/-

நகரத்துக்குக் குடிபெயர்ந்த கிராமத்துப் பறவையின் வழித்தடத்தில் உதிர்ந்த ஓர் இறகில் முளைத்த கவிதைகளின் தொகுப்பு. கிராம வாழ்க்கையின் இயல்புகள், நகர வாழ்வின் நடைமுறைச் சிக்கல்கள் மட்டுமின்றி அகம் சார்ந்த உணர்வுப் போராட்டங்களும் உருகி ஓடுகின்றன மழை போல. பெய்து தீர்ந்த பெருமழையில் பின்னோக்கி நனைய நூலுக்குள் நுழைந்தால், யதார்த்தத் தூறல்கள் சாட்டையாய்ச் சொடுக்க, சுடச்சுட நனைக்கிறது மழை.

இஸ்லாமிய அழைப்பும் செயல் முறையும், ஆசிரியர் : மௌலானா சையத் அபுல் அஃலா மௌதூதி
தமிழில் : டி.அஜீஸ் லுத்ஃபுல்லாஹ்
வெளியீடு : இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட், 138, பெரம்பூர் நெடுஞ்சாலை, சென்னை - 600 012. விலை ரூ.40/-

அறுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் மாநாடு ஒன்றில் நூலாசிரியர் ஆற்றிய உரையின் தமிழாக்கம் இந்நூல். இஸ்லாமின் அழைப்பு என்ன என்பதையும், அதன் செயல்முறைகளையும் குறித்து அன்றைய நோக்கில் ஆற்றியுள்ள உரை. இன்றைய சூழலுக்கும் பொருந்தும் வகையில் சுவை குன்றாமல் பதிப்பிக்கப்பட்டுள்ளது. தமது உரையினூடே சமூகத்தின் மீது அவர் வைத்துள்ள விமர்சனங்கள் மீண்டும் வாசிக்கச் செய்து, சிந்தனையைத் தூண்டுகின்றன.

- நேயமுகில்

# மும்பை பக்கம்



அல்கைதா தீவிரவாதத் தாக்குதலின்போது, போலீஸ் உடனடியாக நடவடிக்கையில் இறங்கவில்லை என அது பற்றி விசாரித்த ராம் பிரதான் கமிட்டி சுட்டிக்காட்டி இருக்கிறது. எனவே மும்பை போலீஸ் கமிஷனராக இருந்த ஹசன் கஃபூரைத் தூக்கிவிட்டு, 1976 பேட்ச் ஐ.பி.எஸ். அதிகாரியான சிவானந்தத்தை கமிஷனராகப் போட்டிருக்கிறது மகாராஷ்டிர அரசு. "சரிந்திருக்கும் மும்பை போலீஸ் இமேஜைத் தூக்கி நிறுத்தி, நல்ல பெயர் எடுப்பது பெரிய சவால் தான்" என்று சொல்லும் சிவானந்தம், உடனடியாக ஆயிரம் போலீஸ்காரர்களைத் தேர்ந்தெடுத்து, கடுமையாகப் பயிற்சி அளிக்க உத்தரவிட்டிருக்கிறார். எங்கே பிரச்னை என்றாலும் இந்த ஸ்பெஷல் பிரிவு போலீஸ் உடனடியாக ஸ்பாட்டுக்கு விரையுமாம்.

***(டி.வி. சேனல்களோட லைவ் கவரேஜைத் தடுக்க ஒரு வழி பண்ணுங்க ஸார்!)***

மும்பையில் பிரதான லேண்ட் மார்க் பட்டியலில் கேட் வே ஆஃப் இந்தியா, மும்பை ஸ்டாக் எக்ஸ்சேஞ்ச் கட்டிடம், தாஜ் ஹோட்டல் ஆகியவற்றுடன் லேட்டஸ்ட்டாகச் சேர்ந்திருப்பது பாந்த்ரா - ஓர்லி கடல் வழி மேம்பாலம். பத்தாண்டுகளுக்கு முன் தொடங்கப்பட்ட பணி, ஆயிரத்து அறுநூறு கோடி ரூபாயை விழுங்கி, அரபிக்கடல் மீது 4.7 கி.மீட்டருக்கு கம்பீரமாக நிற்கிறது. அங்கே ஒன்பது கோடி செலவில் நிறுவப்பட்டுள்ள விளக்குகள் இரவில் ஒளிர்கின்றன. தினமும் இரண்டரை லட்சம் வாகனங்கள் செல்லும் பாந்த்ரா - ஓர்லி இடையிலான எட்டு கி.மீ. தூரத்தை, சாலை வழியாக பீக் ஹவரில் கடக்க, முன்பு ஒன்றரை மணி நேரம் ஆகுமாம். இப்போது பத்தே பத்து நிமிடம். ஆனால், இந்தப் பாலத்தில் செல்ல கட்டணம் உண்டு. ஒரு முறை என்றால் ரூ.50. ரிட்டர்னுக்குச் சேர்த்து ரூ.75/-

***(கட்சிக் கொடி கட்டின காருக்கும்கூட கட்டணம் வசூலிப்பாங்களா?)***

லண்டனுக்கு ஒரு ஜாலி ட்ரிப் அடித்துவிட்டுத் திரும்பிய கையோடு, ஷாருக்கான் மலேஷியாவுக்குப் பறந்த விஷயம் பாலிவுட்டில் பரபரப்பாகப் பேசப்படுகிறது. ஷாருக், மலேஷியா சென்றது மலேஷியப் பிரதமர் நஜிப்பின் பிறந்த நாள் விழாவில் கலந்து கொள்ள. ஷாருக்கானின் பரம

விசிறியாம் மலேஷியப் பிரதமர்.

*('மலேஷியாவின் நல்லாட்சியே'ன்னு ஊர் முழுக்க பேனர் வெச்சிருந்தாங்களா?)*

# ஷாருக்கானின் 'பிரதம' ரசிகர்!

• நஜிப்





**ஹு**சைன் சையத் ஒரு சூப்பர் டூப்பர். பிஸியான வங்கிகளின் உள்ளே போய் நின்று கொண்டு, 500, 1000 ரூபாய் பணம் போட வரும், பணம் எடுக்கும் கஸ்டமர்களிடம் பேச்சு கொடுத்து, ''மும்பையில் ஏராளமாக கள்ள நோட்டு புழங்குகிறது. நான் கள்ள நோட்டுகளைக் கண்டுபிடிப்பதில் எக்ஸ்பர்ட். பணத்தைக் கொடுங்கள்: ஒரு சில நிமிடங்களில், செக் பண்ணிக் கொடுத்துவிடுகிறேன்'' என்று சொல்வார். நம்பிக் கொடுத்தால், மனிதர் நிமிடத்தில் ஜூட். அண்மையில் ஒரு போலீஸ்காரரிடமே இவர் கைவரிசையைக் காட்ட, இப்போது கம்பி எண்ணுகிறார்.

*(ஜெயில் கம்பியில் கள்ளக் கம்பி இருக்கான்னு பாருங்க சையது!)*

**உ**லக சுகாதாரக் கழகத்தின் 'சாலைப் பாதுகாப்பு அறிக்கை'யின்படி, சாலை விபத்து மரண எண்ணிக்கையில், சீனாவை முந்திவிட்டது இந்தியா. சாலை விபத்துக்களில் டாப் ஃபைவ் மாநிலங்கள்: தமிழ்நாடு, மகாராஷ்டிரா, கர்நாடகா, ஆந்திரா, கேரளா. டாப் ஃபைவ் நகரங்கள்: மும்பை, டெல்லி, சென்னை, பூனா, பெங்களூரு.

*(ஓ! அதனாலத்தான் பாலுவுக்கு தரைவழி போக்குவரத்துத் துறையைக் கொடுக்கலையா?)*

**- பரத் ராம்**

# டால்மியாபுரம் கணேசன்



இல்லைன்னா எதையும் அடையவும் முடியாதுன்னு இப்ப புரியறது. ஆனா, அன்னைக்கு நிலை அப்படியில்ல...

திடீர்னு வீட்டைக் காலி பண்றதுன்னா சும்மாவா? கொஞ்ச நேரம் பிரமை பிடிச்ச மாதிரி இருந்தது. பெரியவாளைத் தவிர வேற யாரைத் தெரியும். 'கொஞ்ச நாளைக்கு மெட்ராஸ்லதான் இருக்கணும்'னு சொன்னவருக்கு, இந்தச் சூழ்நிலையும் தெரிந்துதானே இருக்கும்னு மனசுக்குள்ள ஒரு



3

**பூ**ரணியின் குரலில் தென்பட்ட கலக்கம், கிருஷ்ணமூர்த்தியின் குரலில் இல்லை. மெல்லச் சிரித்தவாறே தொடர்ந்தார்:

"கர்மா மனுஷனை விடறதே இல்லை. ஜெயிலுக்குப் போகணும்னு இருந்தது. நாகப்பட்டினத்துல கூட்டத்துல - மேடைல ஏறி - தேசபக்திப் பாடலைப் பாடினேன். அவ்வளவுதான். போலீஸ் வந்து ஜெயிலுக்குக் கூட்டிண்டு போனாங்க. இல்லைன்னா ராஜாஜியையோ, காமராஜரையோ பாத்திருக்க முடியுமா? அவாளுக்கு சமைச்சுப் போடற பாக்யம்தான் கிடைச்சிருக்குமா? நிச்சயமா இல்ல.

வழக்கம் போல கணக்குப் பிள்ளையா காலம் ஓடியிருக்கும். ஜெயிலுக்குப் போனதால, சமையல் தொழிலாச்சு; கணக்குப் பிள்ளை வேலை போச்சு. இழுக்கத் தயாரா

மின்னல் வெட்டு மாதிரி தோணித்து.''

**சொ**ல்லிக் கொண்டே வந்த கிருஷ்ணமூர்த்தி கொஞ்சம் இடைவெளி விட்டார். தம்ளரில் இருந்த நீரைப் பருகி னார். பூரணியும் அரவிந்தனும் அவரையே கவனித்துக் கொண்டிருந்தார்கள்.



கதவின் வழியே பரவிய வெளிச் சத்தில், அவர் முகம் உணர்ச்சிமயமாய் இருந்தது. கண்களில் முளைகட்டி நின்றது கண்ணீர். அவர்கள் கவனிப்பதை உணர்ந்து, தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டவராகப் பேச்சைத் தொடர்ந்தார் கிருஷ்ணமூர்த்தி.

''பெரியவாளை நினைச்சாலே இப் படித்தான். மனசு கரைஞ்சு கண்வழியே வழியறதை நிறுத்த முடியாது. ம்... சோழ வித்யாபுரம் எங்கே? மெட்ராஸ் எங்கே? டெல்லி எங்கே? இதோ இந்த சங்கராபுரம் தான் எங்கே... ஒவ்வொண்ணும் ஒவ் வொரு மூலை. நானா எங்கயும் போகலை. அந்த தெய்வம் காட்டின வழில நடந்தேன்; இந்த இடத்துக்கு வந்திருக்கேன்...''

நெகிழ்வும் உருக்கமும் பொங்கித் ததும்பின அவர் குரலில். அதே நெகிழ்ச்சி யுடன் தொடர்ந்தார்:

''மெட்ராஸ்ல முதல்ல மடத்துக்குப் போன்னு பெரியவா சொன்னது ஞாபகத் துக்கு வந்தது. 'மெட்ராஸ் வந்த உடனே போறது மட்டுமில்ல; எந்தப் பிரச்னைன் னாலும் முதல்ல மடத்துக்குப் போகணும்'னு அர்த்தம் இருக்கற மாதிரி மனசுக்குப் பட்டது. போய் மேனேஜரைப் பார்த்து விஷயத்தைச் சொன்னேன்.

'வீணா கவலைப்படாதேள்! அம்பாள் கைவிடமாட்டா! நல்ல வழிகாட்டுவா! வாங்கோ வீட்டுச் சொந்தக்காரரைப் பார்த்து பேசலாம்'னு கூட்டிண்டு போனார்.

மேனேஜர் நல்ல மனுஷர்னா, வீட்டுக் காரர் அவரைவிட நல்ல மனுஷர்!

'எனக்கு நன்னாத் தெரியறது. கிருஷ்ண மூர்த்தி நல்ல மனுஷ்யர். நியாயமா சத்தி யத்துக்குக் கட்டுப்பட்டு தொழில்

# சங்கராபுரம்

## அருள்வாக்கு

**வ**சதி இருக்கிறவர்கள் தேவைக்கு மேல் பட்டுப் புடைவை, ஸில்க் ஷர்ட் என்று தோஷத்தை அதிகமாக இப்போது வளர்த்துக் கொண்டிருப்பது ஒரு பக்கம், அதே சமயம் இவர்களைப் பார்த்து வசதியில்லாதவர்களுக்கும் சபலம் பிடித்து ஆட்டுகிறது. அவர்களும்கூடக் கடன் வாங்கியாவது இந்த வேண்டாத தேவைகளைப் பூர்த்தி பண்ணிக் கொள்ள நினைத்து, கடனாளியாகி அநேக உபத்திரவங்களுக்கு உள்ளாகி வருகிறார்கள்.

தேவையை எவ்வளவுக்கு எவ்வளவு அதிகப்படுத்திக் கொள்கிறோமோ, அவ்வளவுக்கு அவ்வளவு சாந்தி குறையும்; சௌக்கியம் குறையும்; நிம்மதியும், திருப்தியும் குறையும். தரித்திரம், துக்கம் உண்டாகும். Standard of living என்பதை 'வாழ்க்கைத் தரம்' என்று மொழி பெயர்ப்பதே சரியல்ல. 'வாழ்க்கைத் தரம்' என்பது மிகவும் உயர்ந்த விஷயம். நல்ல குணங்களுடன், ஈசுவர பக்தியுடன் வாழ்கிற வாழ்வே 'தரமான' வாழ்வு. வாழ்க்கைத் தரத்தை

பண்றார். விருத்தியாகிண்டு வரது. ஆனா எனக்கு வேறே வழி தெரியலே ஸ்வாமி. பொண்ணு மலைபோல வளந்து நிக்கறா. வயசு 25 ஆயிடுத்து. ஒரு நல்ல வரன் வந்திருக்கு. விட எனக்கு மனசில்லே. ஆசைக்கு ஒரு பொண்ணு. சிறப்பா கல்யாணம் பண்ணணுமில்லையா? அதனாலே தான் இந்த முடிவுக்கு வந்தேன். எனக்கு நீங்கதான் உதவி பண்ணணும்'னு மேனேஜர் கையைப் பிடித்துக்கொண்டு அவர் கெஞ்சினார்.

'ஏன் ஸ்வாமி இப்படியெல்லாம் பேசறேள்? சொத்து ஒங்களுது. அத விக்கறதுக்கு ஒங்களுக்கு பூரண உரிமையிருக்கு. அதுக்கு நியாயமான காரணமுமிருக்கு. அனாவசியமாய் கவலைப்படாதேள்.'

**மே**னேஜர் என்னைத் தனியாக அழைத்துக் கொண்டுபோய், 'வீட்டை நீங்களே வாங்கிடுங்கோ! இப்ப ஒங்களாலே அதிகபட்சம் எவ்வளவு பணம் பொரட்ட முடியும்?'னு கேட்டார்.

'கொழந்தைகள் வருங்காலத்தை உத்தேசித்து ஏதோ கொஞ்சம் பேங்கிலே முடிஞ்சபோதெல்லாம் போட்டுண்டு வரேன். அதிகபட்சம் ரூ.10,000/- தேறும். அதைத்தவிர வேற வழியே இல்ல ஸ்வாமி.'

'கவலைப்படாதேள். வாங்கோ என்னோட'ன்னார். வீட்டுச் சொந்தக்காரரைச் சந்திக்க, 'வீட்டை கிருஷ்ணமூர்த்தியே வாங்கிக்கலாம்னு முடிவு பண்ணிட்டார். என்ன வெலை சொல்றேள்.'

மேனேஜர் கேட்டதும் உற்சாகமாய்ச் சொன்னார் வீட்டுக்காரர்:

'அவரே வாங்கிண்டா நேக்கு சந்தோஷம்தான். அவரோட நெலமையும் நேக்கு புரியறது. நேத்திக்குக்கூட ஒருத்தர் 23,000/-த்துக்கு கேட்டுட்டுப் போனார். அவ்வளவுக்கெல்லாம் நான் ஆசைப்

**வீணா கவலைப்படாதேள்! அம்பாள் கைவிடமாட்டா! நல்ல வழிகாட்டுவா! வாங்கோ வீட்டுச் சொந்தக்காரரைப் பார்த்துப் பேசலாம்.**



quality of life என்று சொல்லவேண்டும். தற்போது பொருளாதாரத் தேவைகளை அதிகமாக்கிக் கொண்டே போவதைத்தான் 'வாழ்க்கைத் தரம்' என்கிறார்கள். இதை விட்டு, மனசினால் உயர்ந்த, வாஸ்தவமாகவே வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொள்வதைத்தான் பெரியதாக எண்ண வேண்டும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

படலே. ஒரே விலை 20.000/- குடுத்தார்னா கிருஷ்ணமூர்த்தியே எடுத்துக்கட்டும்.'

மேனேஜர் பளிச்சென்று சொன்னார்:

'சம்மதம். கிருஷ்ணமூர்த்தி ஒங்க வீட்டை வாங்கியாச்சு. புடிங்கோ அச்சாரம்'னு ரூ.101/- அவரே கொடுத்துட்டார். 'இன்னும் பத்து நாள்லே ரிஜிஸ்டர் பண்ணிக்கலாம். நாளைக்கு 10,000/- கிருஷ்ணமூர்த்தி கொடுத்துடுவார். பாக்கி பணம் ரிஜிஸ்ட்டரார் பார்வைல பத்திரம் பதிவு பண்ற அன்னிக்கு. ஒங்களுக்குத் திருப்திதானே?'

மேனேஜர் சொன்னதைக் கேட்டதும், பயத்தில் கலங்கியது வயிறு.

'பத்தாயிரம் பேங்கில் இருக்கு. கொடுத்துடலாம். இன்னும் பத்தாயிரம்? அதற்கு எங்கே போறது? எவ்வளவு வட்டி? எப்படிக் கொடுப்பது?'

நடப்பது எதுவும் புரியாமல் பிரமை பிடித்தவன் போல நின்றேன்.

'என்ன ஸ்வாமி, பயத்தில் இருக்கிறீரா?' - கிண்டலடித்தார் மேனேஜர்.

'வீணா கவலைப்படாதேள் கிருஷ்ணமூர்த்தி. அம்பாள் வழி காட்டுவா! நாளைக்கு மொதல்வேலையா பேங்கிலேருந்து பணத்தை எடுத்து அவர்கிட்டே கொண்டு குடுத்து வீட்டோட மூல பத்திரத்தை வாங்கிண்டு என்னை வந்து பாருங்கோ!'

'ரொம்ப பயமாயிருக்கு! இதெல்லாம் சரியா நடக்குமா? அகலக்கால் வைக்கக் கூடாதுன்னு என் மனைவி அடிக்கடி சொல்வா!'

'எல்லாம் நல்லபடியா நடக்கும். என் மேலே ஒங்களுக்கு நம்பிக்கை இருக்கா இல்லியா? தைரியமா போங்கோ ஸ்வாமி!'

மேனேஜரின் வார்த்தைகள் தைரிய மளித்தாலும், மனத்தில் துணிவில்லை. நாக்கு உலர்ந்து, கை கால்கள் வெலவெலக்க, வீட்டு வாசல் திண்ணையில் உட்கார்ந்து 'சாரதம்' என்றேன்.

வெளியே வந்தவள் என்னைப் பார்த்துப் பதறினாள்:

'ஏன்னா? என்னாச்சு? உடம்பு என்ன பண்றது?'

(தொடரும்)

# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடறோம்!

ஆமாம்! உங்க திருவண்ணாமலை, வேலூர் மாவட்டங்களுக்கு 'கல்கி' குழு, நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்!

ஆனா சில கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- திருவண்ணாமாலை, வேலூர் வட்டாரத்தின்...

  பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

  ஆன்மிக, வியாபார, சுற்றுலா தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

  சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

  நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்

  என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 20.8.09**

**கலக்க வருதுப்பா கல்கி**
**திருவண்ணாமலை, வேலூர்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்
☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32



அந்தமானிலிருந்து விமானத்தில் சென்னைக்குப் பறந்துகொண்டிருந்த சமயம், என் மனத்தில் இன்னொரு ஃப்ளாஷ்பேக். கல்லூரி மாணவனாக ஆனந்த விகடன் மாணவ நிருபர் திட்டத்தில் ஃபோட்டோகிராஃபர்



# லைட் ஹவுஸுக்கே லைட்டிங்!

6

- கே.வி.ஆனந்த்

பிரிவுக்கு விண்ணப்பித்தேன். 'நாம எடுக்கும் படங்களை எல்லாரும் பாராட்டறாங்க! எனவே, விகடனில் செலக்ட் பண்ணிடுவாங்க' என்ற நம்பிக்கை. ஆனால், நான் தேர்வாகவில்லை. எனக்குப் பெரும் ஏமாற்றம். வெறுப்பில் கொஞ்ச நாள் கேமராவையே தொடவில்லை.

இந்தியா டுடேவுக்கு நான் அனுப்பிய புகைப்பட ஆல்பத்தைத் திருப்பி அனுப்பிவிட்டார்கள். அதை எடுத்துக் கொண்டு, மறுநாள் பி.சி.ஸாரைச் சந்தித்து, ஆல்பத்தைக் கொடுத்தேன். புரட்டிப் பார்த்துவிட்டு, ''நீங்க ஃபோட்டோகிராஃபரா நல்லா வந்திட்டீங்களே! அதிலேயே தொடரலாமே!'' என்றார். நான் இந்தியா டுடே அளித்த ஏமாற்றம், இனி தொழில் ரீதியாக ஃபோட்டோகிராஃபியே வேண்டாம் என்ற என் தீர்மானம் பற்றியெல்லாம் அவரிடம் சொல்லவில்லை. மாறாக, ஸ்டில் கேமராவிலிருந்து விலகி, மூவி கேமராமேன் ஆவதில் ஆர்வமாக இருப்பதாகச் சொன்னேன். அடுத்தடுத்து இரண்டு மூன்று நாட்கள் என்னை வீட்டுக்கு வரச் சொன்னார். நான் அவரிடம் சேர்வதில் எவ்வளவு சீரியஸாக இருக்கிறேன் என்பதற்கு அது டெஸ்ட் என்று பிறகுதான் தெரிந்தது.

என் ஃபோட்டோகிராஃபி மீது நம்பிக்கை வைத்து தமது விளம்பரப் படங்களுக்கு என்னை அஸிஸ்டென்டாகச் சேர்த்துக்கொள்ள பி.சி. ஸார் முடிவு செய்திருந்தார்.

எங்கள் சந்திப்பு முடிந்து ஒரு வாரம் இருக்கும். அப்போது ஒரு நாள், ஜீவா



முதல் எம்.எஸ்.பிரபு வரையிலான அஸிஸ்டென்ட்கள் சூழ்ந்து நிற்க பி.ஸி. சார் ஏதோ விவாதித்துக் கொண்டிருந்தார். என்னைப் பார்த்ததும், ஜீவா, ''இவனுக்கும் டிக்கெட் போட்டுவிடு'' என்றார். எதுக்காக எனக்கு டிக்கெட் என்று புரியவில்லை. ''கோபுர வாசலிலே படத்தோட ஷூட்டிங் ஆரம்பிக்குது. நாம எல்லாம் கொடைக்கானல் போறோம்'' என்றார் எம்.எஸ்.பிரபு.

அந்த எம்.எஸ்.பிரபுதான் 'அயன்' படத்துக்கு ஒளிப்பதிவாளர். என்னைப் பலரும் கேட்கும் ஒரு கேள்வி, ''நீங்களே ஒரு கேமராமேன். பிறகு எதற்கு உங்கள் டைரக்‌ஷனில் வேறு ஒரு கேமராமேன்?'' என்பதுதான். பாலுமகேந்திரா, பி.சி. ஸ்ரீராம், சந்தோஷ் சிவன், ஜீவா போன்றவர்கள் படங்களை இயக்கி, ஒளிப்பதிவையும் கவனித்துக் கொண்டிருக்கிறார்களே? ஆனாலும் ஒரு படத்தை இயக்குகிறபோது, அதற்கு நான் ஒளிப்பதிவு செய்யக் கூடாது என்பதில் உறுதியாய் இருக்கிறேன். மனத்தில் இருக்கும் கதையை என் எதிர்பார்ப்புக்கு ஏற்றபடி, ஒளிப்பதிவு செய்யக்கூடிய வேறு ஒரு கேமராமேன்தான் ஒளிப்பதிவு செய்ய வேண்டும்.

நான் ஒளிப்பதிவாளராகப் பணிபுரியும் படத்தின் ஒவ்வொரு காட்சிக்கும், தேவைக்கு ஏற்ப லைட்டிங் செய்து, அது டைரக்டருக்கும் திருப்தியாக அமைந்தாலும் கூட, 'இப்போ செஞ்ச லைட்டிங்கில் சில மாற்றங்கள் செய்திருந்தால் ஸீன் இன்னும் சிறப்பாக வந்திருக்குமோ?' என்று புலம்பிக் கொண்டிருப்பேன். டைரக்டர் ஷங்கர் கூட என்னிடம், 'உங்களுக்கு எவ்வளவு லைட்டிங் பண்ணினாலும் திருப்தியே ஏற்படாதே!' என்று கமெண்ட் அடிப்பார். உதவியாளர்களிடம் 'இப்படி லைட்டிங் செய்! கேமராவை அங்கே வை! டிராலியை இப்படிப் போடு!' என உத்தரவுகள் போட்டுவிட்டு, செட்டுக்கு வெளியே வந்து ரிலாக்ஸ் பண்ணுவது, ஹீரோ, ஹீரோயினிடம் ஜாலியாக அரட்டை அடிப்பது இதெல்லாம் எனக்குப் பிடிக்காது.

லைட்டிங் நடக்கிற நேரத்தில்தான் பல டைரக்டர்கள் வசனங்களில் சில மாற்றங்கள் செய்து காட்சிக்கு வலு சேர்ப்பார்கள். நடிக, நடிகையாளர்களுக்கு நடிப்பில் திருத்தங்கள் சொல்வார்கள். இதெல்லாம் ஓர் இயக்குநருக்கு, காட்சியைச் சிறப்பாக அமைக்கக் கிடைக்கும் போனஸ் நேரம்.

இயக்குநர் மன்சூர் கான் இயக்கி ஷாருக்கான் - ஐஸ்வர்யா ராய் நடித்த 'ஜோஷ்' படத்தின் ஷூட்டிங் கோவா பீச்சில் நடந்தது. சுமார் மூந்நூறு ஜூனியர் ஆர்ட்டிஸ்ட்கள் பங்கேற்கும் இரவு நேர ஷூட்டிங். நான் லைட்டிங் முடித்துவிட்டு, ''கேமரா ரெடி!'' என்று டைரக்டரிடம் சொன்னேன். ஆனால் அவரோ,

ஸ்டார்ட்... கேமரா ஆனந்த்!

படப்பிடிப்புக்குத் தயாராக இல்லை. "ஆனந்த்! அதோ அந்த லைட் ஹவுஸ் பகுதி ரொம்ப இருட்டா இருக்கில்ல? அங்க கொஞ்சம் லைட்டிங் பண்ண லாமே!" என்று சொல்லிவிட்டு, என்னைப் பார்த்து லேசாகச் சிரிக்க, 'ம் லைட் ஹவுஸ'க்கே லைட்டிங்கா?' என்று எனக்குள்ளே சொல்லிக்கொண்டே பதிலுக்குப் புன்னகை செய்தேன்.

ஒளிப்பதிவாளராக லைட்டிங், கேமரா விஷயங்களைக் கவனித்துக் கொண்டிருந்தால், ஒரு இயக்குநருக்கான போனஸ் நேரத்தை இழக்க நேரிடும். லைட்டிங், கேமரா வேலையை உதவியாளர்களிடம்



ஒளிப்பதிவாளராக லைட்டிங் கேமரா விஷயங்களைக் கவனித்துக் கொண்டிருந்தால் இயக்குநருக்கான போனஸ் நேரத்தை இழக்க நேரிடும்

விட்டுவிட்டு, இயக்குநராக கடைசி நேரத்துத் திருத்தங்களில் கவனம் செலுத்தினால், லைட்டிங் இன்னமும் சிறப்பாக இருந்திருக்கலாமோ என்ற நெருடல் இருந்துகொண்டே இருக்கும். எனவேதான் என் படத்துக்கு வேறொரு கேமராமேன்.

**நா**ன் முதல் படமான 'கனாக் கண்டேன்' இயக்கியபோது, என்னிடம் அஸிஸ்டென்ட்டாக இருந்த செளந்தர ராஜன்தான் கேமராமேன். நான் பி.சி. ஸாரிடம் இருந்தபோது என் ஸீனியரான எம்.எஸ். பிரபுதான் 'அயன்' படத்துக்கு ஒளிப்பதிவு செய்தார். எனக்கும், பிரபுவுக்கும் தொழிலைத் தாண்டி நட்பு ரீதியான நெருக்கம் அதிகம்.

மணிரத்னம் இயக்கிய படங்களின் பாடல்கள் கேசட் வெளியானதும் அந்தப் பாடல்களை கண்களை மூடிக்கொண்டு கேட்போம். ஒவ்வொரு பாட்டின் வரிகளையும் வைத்துக் கொண்டு, 'இதை மணிரத்னம் செட்டில் எடுத்திருப்பாரா? அவுட் டோரில் எடுத்திருப்பாரா? செட் என்றால் என்ன மாதிரியான செட் போட்டிருப்பார்? அவுட் டோர் என்றால் லொக்கேஷன் எப்படி இருக்கும்?' என்றெல்லாம் கற்பனை செய்வோம். படம் வெளியானதும் எங்கள் கற்பனையைத் தாண்டி, மணிரத்னம் அந்தப் பாடல் காட்சிகளை எடுத்திருப்பது கண்டு வியப்போம்.

எங்களுக்கிடையிலான புரிதல் காரணமாக, அயன் படத்தின் ஸ்கிரிப்ட்டைக் கொடுத்து, ஒளிப்பதிவு செய்யும்படி எம்.எஸ்.பிரபுவிடம் கேட்டபோது, உடனடியாக ஒப்புக்கொண்டார்.

ஆனாலும், அயன் படத்தில் சில காட்சிகளை நானே படம் பிடித்தேன். ஏன்?

**(ஆக்‌ஷன் தொடரும்)**

எழுத்து வடிவம்:
**எஸ்.சந்திரமௌலி**

# சிரி... சிரி... சிரி...

ஆசைக்கும் பேராசைக்கும் என்னடா வித்தியாசம்?

ரேஷன் கடை

இப்ப மண்ணெண்ணெய் வாங்கறதுக்கு நின்னுட்டிருக்கோம்.

இவ்வளவு பெரிய க்யூவுல நமக்கும் எண்ணெய் கிடைக்கும்னு நினைக்கறது ஆசை.

சரி...

அந்த எண்ணெய் அளவு குறையாம சரியா இருக்கணும்னு எதிர்பார்க்கறது பேராசை

- ராஜபாளையம். எஸ். சக்தி

நீதானே கொலை செய்தே?

இல்லை எசமான்...

நீ கொலை செய்ததைப் பார்த்தா சொல்ல எட்டு சாட்சி இருக்கு. என்ன சொல்றே?

நான் கொலை செய்ததைப் பார்க்கலைன்னு சொல்ல என்கிட்டே பத்து சாட்சி இருக்கே?

- நெல்லை. குரலோன்



முதன் முதலாக, கல்யாணப் பந்தலில் மாலை மாற்றும் சந்தர்ப்பத்தில், ஸ்ரீதரன் சாவித்திரியைப் பார்த்தான். சாவித்திரி அப்போது குனிந்த தலைநிமிராமல் இருந் தாள். கிராமாந்தர வழக்கப்படி, அவளுக் குப் பதினெட்டு முழப் புடைவை உடுத்தி, தலையில் பழைய காலத்து நகைகள் எல் லாம் அணிவித்து அலங்காரம் செய்திருந் தார்கள். அதைப் பார்த்த ஸ்ரீதரன், 'கர்நாட கம் என்றால் படு கர்நாடகம்' என்று தீர்மா னித்துக் கொண்டான். பிறகு, திருமாங்கல்ய தாரணத்துக்கு முன்பு மணமகனும் மண மகளும் மந்திரோச்சாடனத்துடன் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கும் கட்டம் வந் தது. இருவரையும் எதிர் எதிரே உட்கார வைத்து ஒரு பட்டுத் துணியைப் போட்டு மூடினார்கள். மந்திரம் பண்ணிவைத்த சாஸ்திரிகள், ''முகத்தைப் பார்த்தாயா?'' என்று கேட்டார். ஆம்; ஸ்ரீதரன் சாவித்திரி யின் முகத்தைப் பார்த்தான். முதலில் அவளுடைய கண்கள்தான் தெரிந்தன. அந்தக் கண்களின் பார்வையில் இருந்த ஒருவிதப் பரிதாபம் அவன் இருதயத்தை ஒரு கணநேரம் என்னமோ செய்தது. அப் புறம், முகம் தெரிந்தது. வெகு நேரம் ஹோம குண்டத்துக்கு எதிரில் இருந்து சாவித்திரியின் முகம் புகையுண்டிருந்தது.

# கர்நாடகம்..

போதாததற்குக் கண்களை அடிக்கடி கசக்கியதனால் கண்ணில் இட்டிருந்த மை கன்னமெல்லாம் வழிந்திருந்தது. மூக்கிலே புல்லாக்குத் தொங்கிற்று. இந்த நிலை யிலிருந்த சாவித்திரியின் முகத்தைப் பார்த்த தும், ஸ்ரீதரன், 'இவ்வளவு அவலட்சண மான முகம் இந்த உலகத்திலேயே இருக்க முடியாது' என்று தீர்மானித்துவிட்டான்.

சாவித்திரியின் மனோநிலையோ

அமரர் கல்கி

இதற்கு நேர்மாறாக இருந்தது. கல்யாணம் நிச்சயமானதிலிருந்து அவள், 'ஸ்ரீதரன், ஸ்ரீதரன்' என்று மனத்துக்குள் ஜபம் செய்து கொண்டிருந்தாள். காகிதத்தையும் பென்சிலையும் எடுத்துக் கொண்டு போய்த் தனியான இடத்தில் உட்கார்ந்து கொண்டு, 'ஸ்ரீதரன், பி.ஏ.' 'ஸ்ரீதரய்யர், பி.ஏ.,' 'மகா-ா-ா-ஸ்ரீ ஸ்ரீதரய்யர் அவர்கள்' என்றெல்லாம் எழுதி எழுதிப் பார்ப்பாள். கல்யாணத் தேதி நெருங்க நெருங்க, ஸ்ரீதரனைப் பார்க்க வேண்டுமென்னும் அவளுடைய ஆவலும் அதிகமாகிக் கொண்டிருந்தது.

சாவித்திரி, முதன்முதலாக ஸ்ரீதரனைப் பார்த்தபோது, அவள் உடல் முழுதும் மகிழ்ச்சியினால் ஒரு குலுங்கு குலுங்கிற்று. அவள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தபடி ஸ்ரீதரன் உச்சிக் குடுமியுடன் இராமல், நாகரிகமாக கிராப் வைத்துக் கொண்டிருப்பதையும், சிவந்த மேனியுடன் சுந்தர புருஷனாய் விளங்குவதையும் கண்டதும், கர்வத்தினால் அவளுடைய உடல் பூரித்தது. திருமாங்கல்யதாரணத்துக்கு முன்னால், பட்டுத் துணியினால் மறைக்கப்பட்ட சமயம், ஸ்ரீதரனுடைய முகத்தைப் பார்த்த போது, அவளுக்கு மயிர்க்கூச்சம் எடுத்து, கண்களில் ஜலம் வந்துவிட்டது.

# கர்நாடகம்..!

- 'தியாக பூமி' புதினத்திலிருந்து...





இந்திய விமானப் படை பள்ளியில் ஓவிய ஆசிரியராகப் பணிபுரியும் சி.வி.ராஜன், 1991லிருந்து வரையத் தொடங்கியவர். அவரின் அனுபவ வாக்கு மூலமாய் சில வரிகள்...

"தீயணைப்பு வீரராக ஏழு வருடம் வேலை செய்தபோது இந்த ஓவியக் கலையைக் கத்துக்கிட்டேன். எந்த வேலையாக இருந்தாலும் அதில் தொழில் திருப்தி இருக்கணும். அது இல்லேன்னா உறுத்தலா போயிடும். எனக்கான அமைதியும் மகிழ்ச்சியும் இதுதான்னு தெரிஞ்சது. இந்த ஓவிய

# தூரிகை திருப்தி!



திருப்தியாலே எனக்குத் திருமணம்கூட தேவைப்படல. நவீன ஓவியத்தில் எதையாவது வரைந்து தப்பிப்பதும் போலித்தனம் செய்வதும் நிறைய உண்டு. ஆனால், ரியலிசத்தில் அந்தப் பம்மாத்து செல்லுபடியாகாது. அதனால ரியலிசம்தான் என் பாணி. 'யோகா'வை ஓவியத்தில் கடத்தி கண்காட்சி வைக்க இருக்கேன். இதுவரை மூன்று கண்காட்சிகள் நடத்தி இருந்தாலும், நெருப்பு, மாலைச் சூரியன், ஆர்ப்பரிக்கும் கடல், காய்ந்த சருகு இவற்றை நான் வரைவதில்லை. காரணம் மனத்தை ஊடுருவும் மகத்துவம் ஓவியத்துக்கு உண்டு. அந்த மகத்துவம் பரவ இலவசமாக ஓவியத்தைக் கத்துக் கொடுக்கவும் தயாராயிருக்கேன். எனது ஓவிய மொழி சாதாரணமானது. படம் : 2-ல் மஞ்சள் முயற்சியையும், ப்ரவுன் (பழுப்பு) பிரச்னையையும், வெள்ளை இலட்சியத்தையும் குறிப்பதாகக் கொண்டால், வாழ்வின் இலக்கு வெற்றியாகத் துளிர்ப்பதைத்தான் அந்த ஓவியம் குறிக்கிறது'' என்கிறார் 42 வயதாகும் இந்த ஓவிய இளைஞர்.

- அமிர்தா

# உலை

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் மூன்றாம் பரிசு ரூ.5,000 பெறும் கதை

அன்று ஒன்பது மணிவாக்கில்தான் தெரிந்தது அவளுக்கு, ரேஷனில் அரிசி போடப் போகிறார்கள் என்கிற பெரிய உண்மை. காலனி வீடொன்றைக் கடையாகக் கொண்டிருந்த இடத்துக்குப் பக்கத்தில் அவள் குடிசை இருந்தது, சாதகமாகப் போயிற்று.

அடுத்த தெருவுக்கு ஓடி வந்தாள். சாவித்திரி தெருவில் நின்று கீரை வாங்கிக் கொண்டிருந்தாள்.

''அம்மா இன்னிக்கு அரிசி போடுறாங்களாம்.''

''அப்படியாடி? இந்தா ரேஷன் கார்டையும் பணத்தையும் எடுத்துட்டு வந்திர்றேன். மூணு வாரமாச்சு, லெச்சுமிக்கு கஞ்சி வச்சுக் குடுத்து. குத்துச் சட்டி நெறையப் பால் கறக்கும். கஞ்சி குடிக்காம ஒழக்கு நெறையக் கறக்குது.''

கீரைக்கட்டு வீட்டுக்குள் போன வேகத்தில், கையில் பச்சை நிற அட்டையும், இருபது ரூபாய் ஒற்றைச் சிவப்புத் தாளுமாக வெளிவந்தாள் சாவித்திரி. லெச்சுமி என்று பெருமையோடு அழைத்தது அவள் வீட்டுப் பசு மாட்டைத்தான். வைக்கோலும் புல்லுமாய் வாங்கி வைத்தும் அது வகையாய் பால் தரவில்லை என்பது அவளின் வருத்தம். அவள் வீட்டின் சோற்றுப்பாட்டுக்கு ரேஷன் கடையை நம்பியதில்லை. விரும்பியதுமில்லை. கட்டையை வெட்டித் தறித்தது போல விறைப்பாய்ப் போடுகிறார்கள் அரிசியை. வேகவைத்து வயிற்றுக்குக் கொட்டினால் மூலஸ்தானம் வரைக்கும் முணுமுணுக்கிறது வலி. 'அந்தச் சனியன யாரு சோறு வச்சுத் திங்கறது?' அரிசிக்கு அவளுக்குப் பஞ்சமில்லாமல் இருந்தது. கிணற்றுப் பாசனத்தில் பத்து ஏக்கர் நிறைய தழையத் தழைய நஞ்சை வளர்ந்தது. அறுத்துக் கட்டினால் இரண்டு வருஷங்களுக்கு மேல் அலுங்காமல் படியளக்கும் நெல்.

இன்னும் இரண்டு வீடுகள் தள்ளி சந்தியா நின்றிருந்தாள். ஆளும் மினுக்கமுமாய் அம்மன் சிலை கெட்டது. எதிர் வீட்டுப் பொன்னுத்தாயுடன் புறளி பேசுவதிலேயே அவளுக்குப் பொழுது போய்விடும்.

''யம்மா, இன்னிக்கு அரிசி போடுறாங்க.''

அடுத்த நொடியே சித்ராதேவியின் கைக்கு அட்டையும் பணமும் வந்தன. அதே வேகத்தில் பொன்னுத்தாயும் பணமும் அட்டையும் கொண்டு வந்து தந்தாள்.

கடைசியாய் செல்லம்மா வீட்டுக்கு வந்தபோது, அவள் தன் ஆட்டுக்குட்டிகளைத் தொழுவத்தில் கொண்டு போய் அடைத்துக் கொண்டிருந்தது தெரிந்தது. புருஷனுக்கு ஆட்டுக்குட்டி வியாபாரம். கண்ணுக்குக் கண்ணாய் தீனி போட்டு வளர்த்த குட்டிகள் பெரிதானதும், அவற்றைச் சந்தைக்குப் பத்திக்கொண்டு போய் மஞ்சள் பை நிறையப் பணக்கட்டுகளோடு வருவான் அவன். பெரிய ஆடுகளுக்கு இப்போது கஞ்சி வைத்து ஊற்றத்

# அபிமானி

தொடங்கியிருந்தாள் அவள்.

சித்ராதேவியைக் கண்டதும் தொழுவத்தில் கிடந்த கிடாக்குட்டிகள் 'ம்மே...' என்று சத்தம் போட்டன. அரிசிக் கஞ்சியை ருசிக்காமல் அவை தட்டழிந்து கொண்டு வருகின்றன போல.

"சீக்கிரமா வாங்கிட்டு வா புள்ள. ஆடுக தவிச்சுக் கெடக்கிதுவ பாரு."

இன்னும் யார் யார் கார்டுகளைக் கொடுத்தாலும் அவள் வாங்கித் தரத் தயாராக இருந்தாள். ஒருநாளைக்கு இத்தனை கார்டுகளுக்கு வாங்க முடியும் என்பதுதான் யதார்த்தமாயிருந்தது. மேலும் அவர்கள் நால்வரும் அவளின் திடமான வாடிக்கையாளர்களாகிப் போயிருந்தது ஒரு காரணம். மற்றவர்களுக்கு முன்னப் பின்னப் பார்த்து வாங்கித் கொடுத்துக் கொள்ளலாம் என்ற தீர்மானமிருந்தது அவளிடம்.

ஒன்பதரை மணிக்கெல்லாம் கடைக்கு முன் கயிறு கட்டி இழுத்தது போல வரிசை நீண்டுவிட்டிருந்தது. ஆண்களுக்கு ஒரு வரிசையும் பெண்களுக்கு ஒரு வரிசையுமாக அரக்கியின் வாயிலிருந்து நீண்டு மிரட்டிக்கொண்டு நிற்கும் பற்களைப் போல கடை வாசலிலிருந்து இணையாகப் பிரிந்துகிடந்தன வரிசைகள்.

கையில் நான்கு சாக்குப் பைகளுடனும் தன் வயதான அம்மாக் கிழவியுடனும் சித்ராதேவி கடையைச் சமீபித்தாள். அவளின் இரண்டு வயதுப் பையன் அம்மாக் கிழவியின் கைவிரல் பிடித்து 'தவக்தவக்'கென்று வந்து கொண்டிருந்தான். வரிசையில் நிற்கும்போது பையனை இடுப்பில்



தூக்கி வைத்துக் கொள்ளலாம். அல்லது தன் காலருகே நிழலில் விட்டு விளையாடச் சொல்லிக் கொண்டிருக்க லாம். அம்மாவும், அவளும் வரிசையில் அடுத்தடுத்து நின்று கொள்வார்கள். அம்மா வின் கையில் ஒரு கார்டும் அவள் கையில் ஒரு கார்டுமாகப் பதிந்து அரிசி வாங்கிக் கொண்டு அதே வேகத்தில் வரிசையின் பின்னால் வந்து நின்று வரிசையைத் தொடர்வார்கள்.

அவர்கள் முறை வரும்போது மற்ற இரண்டு கார்டுகளுக்கும் அரிசி வாங்கிக் கொள்வார்கள். நான்கு கார்டுகளுக்கும் அரிசி வாங்கிக் கொடுத்ததும், ஆளுக்குப் பத்து ரூபாயாய் தரும் கூலியில் இருபது



***''என்னங்க இன்னிக்கு நம்ம கல்யாண நாள். கோழி அடிச்சுக் குழம்பு வைக்கட்டுமா?''***

***''நான் செஞ்ச தப்புக்கு அதுக்கு ஏம்மா தண்டனை கொடுக்கறே?''***

***- காயத்ரி வெங்கடேஸ்வரன்.***

ரூபாய்க்கு அவளுக்குண்டான அரிசியை வாங்குவதற்கு மீண்டும் வரிசையின் கடைசியில் வந்து ஒட்டிக் கொள்வாள்.

அன்றும் அப்படித்தான் செய்வதாக உத்தேசம்.

சித்ரா வரிசையில் நின்றிருந்தாள்.

''அடியே சித்திரா. அதென்ன அம்மை யும் மொவளும் குடும்பத்தோடு வந்து நிக்கிறிய? அம்மைக்கு ஒரு குடும்பம், மொவளுக்கு ஒரு குடும்பமா?''

- பச்சையம்மாவுக்கு வாய்த் துடுக்கு உண்டு. நல்ல மாதிரி விசாரிக்க வேண்டு மென்றாலும் நாய் மாதிரி குரைத்துக் கொண்டுதான் கேட்பாள். சித்ராதேவியின் குடிசைக்கு நாலு வீடுகள் தள்ளி அவளது குடிசை இருந்தது. அற்று அலைந்த குடும்பம். புருஷன் குடிகாரன். நான்கு குழந்தைகள், நண்டும் நறுங்கலுமாய். அவளும் இவளை மாதிரிதான், மற்றவர் களின் குடும்பக் கார்டுகளுக்கு அரிசி வாங்கித் தந்து கூலி வாங்கிக் கொண் டிருந்தாள். சித்ராதேவிக்கு வடக்குத் தெரு வாடிக்கை என்றால் பச்சையம்மாவுக்குக் கிழத்தெரு.

''எல்லாம் ஒரே குடும்பந்தான். ஒரு கார்டுக்கு ஒரு ஆள் நிக்கறாங்களா இல்லியா, அதப் பாரு. ஒனக்கு நிக்க ஆளில்லன்னா நா என்ன செய்வேன்? மத்தவங்கள மாதிரி வாயைப் பொத்திக் கிட்டு ஊமைக்கோட்டானா நில்லு.''

பல நாட்களாகவே பச்சையம்மா தன்னைக் கரித்துக் கொட்டிக் கொண் டிருந்ததை நெருடலாய் நினைத்துப் பார்த் தாள் சித்ராதேவி. தொழில் போட்டியா, அல்லது அவள் பிழைப்பில் நான் மண்ணள்ளிப் போடுகிறேனா என்று தனக்குத் தானே ஆற்றாமையால் நொந்து கொண்டாள்.

காட்டு வேலைகள் செய்வதற்கு அவள் உடலில் திராணியில்லாமல் இருந்தது.

ஊராருக்கு ரேஷன் அரிசி வாங்கித் தந்து அரைப்பட்டினியும் முழுப் பட்டினியுமாய் குடும்பத்தை நடத்திக்கொண்டு வந்தான்.

''எனக்கு எதுக்கடி ஆளில்ல? எம் புருஷன் ராசா மாதிரி வெள்ளவேட்டி கட்டிக்கிட்டு அழுக்குப்படாம அலையுதாராக்கும். ஒம்புருஷன மாதிரியா! ஒன்னய ஊர்லயும் தெருவுலயும் வுட்டுட்டு எவ பின்னாலயோ கந்தூரங்கிக்கிட்டுப் போயிருக்கான்?''

''பச்சம்மாக்கா! வாய வுட்டுப் பேசாத. எம் பாவம் ஒன்னய சும்மா வுடாது. வரிசய வுட்டுப் போவ முடியாது. இப்ப என்ன செய்யணுங்கற?''

வரிசைக்குப் பின்னாலிருந்து 'வேகுவேகு'வென்று வந்தாள் பச்சையம்மா. பித்த தேகம். தோலும் சதையுமாய் கொழுப்பாய்ந்து கிடந்தது. அவள் விரைந்து வந்த வேகத்தில் அவை விழுதுகளாய் ஆட்டம் போட்டன.

''இப்ப என்ன செய்வனா?''

'படக்'கென்று சித்ராதேவியின் முந்திச் சேலையைப் பிடித்திழுத்து வரிசைக்கு வெளியே விட்டாள்.

சித்ராதேவிக்கு அவமானமாய்ப் போயிற்று. ஆண்களின் வரிசையிலிருந்து ஒருசில பரிகாசச் சிரிப்பொலிகள் கேட்டன.

அம்மாவை வெளியே வரச்சொல்லி அவள் கையில் மகனைத் தந்தாள் சித்ரா தேவி. அம்மா நின்ற இடத்திலே தான் போய் நின்றுகொண்டு வரிசையோடு ஊர்ந்து போனாள்.

''**சா**வித்திரியம்மா... இன்னிக்கு ஒங்க நாலு பேரு கார்டுக்கு மட்டுந்தான் வாங்க முடிஞ்சுது. எங்க கார்டுக்கு வாங்க நேரமில்ல. ஒரு சண்டாளி சனியன் மாதிரி சண்டைக்கு வந்துட்டா. வூட்டுல அடுப்புல போட அரிசி இல்லம்மா எனக்கு. ரெண்டு கிலோ அரிசி குடுத்தீங்கன்னா அடுத்த

**"டாக்டர் வெயிட் தூக்கக்கூடாதுன்னு சொல்லிட்டார்னு வருத்தப்படுறியே ஏன்?"**

**"அதைக் காரணம் சொல்லி என்கிட்ட இருந்த சாவிக்கொத்தை என் மருமகள் வாங்கி வைச்சுக்கிட்டா அதான்."**

**- சொக்கம்பட்டி தேவதாசன்**



வாரம் ரேசன்ல போடும்போது வாங்கித் தந்திர்றேன்.''

''நீ வாங்கித் தந்ததுக்குக் கூலி வாங்கிட்டல்ல? அந்த ரூவாய்க்குக் கடையில அரிசி வாங்கிக்கிறதுதான?''

''கடையில கிலோவுக்குப் பதினெட்டு ரூபாய்க்குக் கொறஞ்சு வாங்க முடியாதும்மா. நாப்பது ரூபாயும் ரெண்டு கிலோ அரிசி வாங்கத்தான் சரியா வரும்.''

''நா என்ன சொன்னேன்? என் லெச்சுமிக்குக் கஞ்சி வச்சு ஊத்தாம பால் சரியா கறக்க மாட்டேங்கிதுன்னு சொன்னேனா இல்லியா? ரேசன் கடை அரிசின்னா சவுரியமா இருக்குமேனுதான் அத வாங்கிட்டு வரச் சொல்றது. மாடுகளுக்கும் பழக்கப்பட்டிருச்சு. நீ எதுக்கும் செல்லம்மாகிட்ட போய்க் கேளேன். அவ

ஆட்டுக்குத்தான் கரைச்சு ஊத்துறா. ஆடுக கொஞ்சந்தானே குடிக்கும்?''

செல்லம்மாவின் கைகள் சந்தியாவைக் காட்டின. சந்தியாவின் கைகள் பொன்னுத் தாயைக் காட்டின. எந்தக் கையிலும் இரக் கத்தின் ரேகைகள் ஓடவில்லை. எல்லாம் தனரேகைகளும் தட்டிக் கழிக்கிற ரேகை களுமாகவே இருந்தன. தெருவின் சுவர் நிழலில் இடிந்துபோய் உட்கார்ந்தாள் சித்ராதேவி. நேரம் மதியத்தைக் கடந்துவிட் டிருந்தது. கிழவியையும் பச்சைக் குழந்தை யையும் காலையிலே வெறும் வயிறாகப் போட்டாகி விட்டது. சாயந்தரத்துக்குள் கஞ்சி காய்ச்சி ஊற்றவில்லை யென்றால், கரிச் சாம்பலாகப் பொசுங்கி விட மாட்டார்களா என்றிருந்தது. கையில் சுருட்டியிருந்த நாற்பது ரூபாய்த் தாள்கள் முட்களாய் அரித்துக் கொண்டிருந்தன. இரண்டு கிலோ அரிசி வாங்கினால் இரண்டு நாட்களுக்கு ஓட்டி விடலாம். வாரத்தின் மிச்ச நாட்களுக்கு என்ன செய்ய? வேறுவழியில்லை. இந்த நாற்பது ரூபாய்தான் கதி. குழந்தையை தான் பார்த்துக்கொண்டு அம்மாவைக் கடைத் தெருவுக்குப் போய் அரிசி வாங்கி வரச் சொல்ல வேண்டும் என்று முடிவு பண்ணினாள்.





கூடாரம் போல ஒடுங்கித் தாழ்ந்து கிடந்தது அவள் குடிசை. ஒப்புக்கு வெளியே ஒட்டுத் திண்ணையும் உள்ளுக் குள் அடுப்படியும் இருந்தன. தென்னங் கீற்றுக் கூரைக்கு கட்டைமண் சுவர்கள் போட்டு அணைத்திருந்தது தட்டிக் கதவு.

வீட்டுக்குள்ளிருந்து உலைமணம் வீசு வது புரிந்தது. திண்ணையில் கிழவியும் இல்லை. குழந்தையும் இல்லை.

வாசலில் நின்று குனிந்து தலையை நுழைத்துப் பார்த்தாள் சித்ராதேவி. அரிசி யின் கொதி பார்த்து விட்டு சுள்ளி விறகு களைச் சூட்டடுப்புக்குள் தள்ளிக் கொண்டிருந்தாள் பச்சையம்மா. சித்ரா தேவியைக் கண்டதும் தன் செய்கையை நிறுத்தி விட்டு, கூச்சத்துடன் அவள் கண்களைச் சந்தித் தாள்.

''வா சித்ரா. நீ வடக்குத் தெருக்காரிகள் கிட்ட கேட்டுக்கிட்டிருந்ததைப் பாத்தேன். என்னாலதான ஒனக்கு அரிசி வாங்க முடியாமப் போச்சு. நா ஒரு அவசர ஜென்மம். ஒந் தரித்திரம் தெரியாம ஒன் னோட தகராறுக்கு நின்னுட்டேன். அதை யெல்லாம் மனசுல வச்சுக்காத. என்னிய மாதிரித்தானெ நீயும். இந்தா இந்தச் சாக்குப்பையில பத்து கிலோ அரிசியக் கொண்டாந்து போட்ருக்கேன். என் அரிசி யில ஒனக்குப் பாதி. அடுத்த வாரம் ரேசன்ல போடும்போது வாங்கிக் குடுத் துரு. சரியா?''

அவள் கை காட்டிய இடத்தில் -

தாய் நாயைப் போல சுவர் முக்கில் சுருண்டு குழைந்து கிடந்தது சாக்குப் பை.●


பாகவதர். தமன்னா ரசிகரோ?
எப்படிக் கண்டுபிடிச்சே?
முன்னெல்லாம் ததரின்னா... ததரின்னானு... பாடுவார். இப்ப தமன்னா... தமன்னானு... பாடறாரே.
இடி சிப்ஸ்
அனுராதாரமேஷ்

தந்தைக்கோ தன் ஊருக்கு உடனே திரும்ப வேண்டிய கட்டாயம். தாய்க்கும் ஊரில் நிறைய வேலைகள் காத்திருந்தன. சிறுமி ஜனாபாயோ பண்டரிபுரத்தை விட்டுக் கிளம்புவதாக இல்லை.

சிறுமியின் அற்புதமான குரல்வளம் மற்றும் விட்டலன் குறித்து நெக்குருக அவள் பாடிய பாடல்கள் அனைத்தும்



கள் பலவற்றையும் தானாகவே செய்தாள்.

அதேசமயம் நாமதேவரின் மனைவிக்கு ஜனாபாயின் மீது ஓர் அலட்சியம் வளர்ந்தது. யாருமற்ற அநாதை என்ற இளக்காரம். மேலும் மேலும் அதிக அளவில் வீட்டு வேலைகளைச் சுமத்தினாள்.

# "எனக்கு ரெண்டு கவளம் தருவாயா?"

வேறொருவர் காதுகளிலும் விழுந்தன. அவர், நாமதேவர்.

அவரும் சிறுமியிடம் பேசிப் பார்த்தார். இனி பண்டரிபுரம்தான் தான் வசிக்க வேண்டிய இடம் என்பதில் மிகவும் தீர்மானமாக இருந்தாள் அந்தச் சிறுமி. சிந்தித்துப் பார்த்த நாமதேவர் ஒரு முடிவுக்கு வந்தார். ஜனாபாயின் பெற்றோரிடம், ''இவள் என்னுடன் வசிக்கட்டும்'' என்றார். பெற்றோரும் அரை குறை மனத்துடன் சம்மதித்துவிட்டுக் கிளம்பிச் சென்றனர்.

''வாம்மா, என் வீட்டுக்குப் போகலாம்'' என்றார் நாமதேவர்.

ஜனாபாய்க்கு நாமதேவரைப் பிடித்துப்போனது. முக்கியமாக அவர் ஒரு தீவிர விட்டல பக்தர் என்பது, அவளுக்கு மேலும் இனிப்பாக இருந்தது. நாமதேவருடன் தங்கச் சம்மதித்தாள்.

காலம் கடந்தது. சிறுமி ஜனாபாய் இளம் பெண்ணானாள். நாமதேவரின் பெருமை கண்டு அவருடைய பக்திமிக்க அடிமையாகவே தன்னை எண்ணிக் கொண்டாள். நாமதேவரின் வீட்டு வேலை

விட்டலனோடு நட்பு பாராட்டும் பெருமை பெற்றவர் நாமதேவர் என்பதை அறிந்ததும் ஜனாபாய்க்குச் சிலிர்ப்பு ஏற்பட்டது. ஒருநாள் தன்னோடும் விட்டலன் பேசுவான், பழகுவான் என்ற நம்பிக்கைக் கீற்று அவளுக்குள் தோன்றியது. அந்த நம்பிக்கை ஒருநாள் நிஜமானது.

அது இரவு நேரம். நாமதேவரும் அவரது குடும்பத்தினரும், ஜனாபாயும் கண்ணுறங்கிக் கொண்டிருந்தனர். காற்று கடுமையாக வீசத் தொடங்கியது. மழை உக்கிரமாகப் பெய்யத் தொடங்கியது. நாமதேவர் வசித்த எளிய வீட்டின் கூரை தூக்கி எறியப்பட்டது. களிமண் சுவர்களெல்லாம் கரையத் தொடங்கின.

'தனது பக்தனும் அவனது குடும்பத்தினரும் மழையால் பாதிக்கப்படுவதா?' மனம்பொறாத மாதவன் தன் சக்கரத்தைப் பெரிதாக்கி நாமதேவரின் வீட்டுக்குமேல் குடைபோல் நிறுத்தினான்.

பொழுது புலர்ந்ததும் கண் விழித்த நாமதேவர், நடந்ததை அறிந்து நெகிழ்ந்தார். நடப்பதைக் கண்டு பதறினார். கண்ணன் தன் கைகளால் மண்ணைப்

# அருண் சரண்யா

பிசைந்து சுவர்களைச் சரிசெய்து கொண்டிருந்தான். அவன் அணிந்திருந்த பட்டாடையெல்லாம் சேறு.

நாமதேவரும் அவர் மனைவியும், ''போதும் விட்டலா, உணவருந்தலாம் வா'' என்று அழைத்தனர்.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் ஜனாபாய்க்கு அந்தக் கிடைத்தற்கரிய பேறு கிடைத்தது. விட்டலன் நீராட வெந்நீர் வைத்தாள். சேறாகியிருந்த கண்ணனின் பீதாம்பரத்தை வாங்கி உலர வைக்க முன்வந்தாள்.

''என் ஆடை உலரும் வரை நான் எதை அணிவது?'' என்று புன்னகையுடன் கேட்டான் விட்டலன். சிறிதும் தயங்காது தனது உலர்ந்த கந்தல் புடைவை ஒன்றை இறைவனுக்கு அளித்தாள் ஜனாபாய். அதை விருப்பத்துடன் அணிந்துகொண்டான் விட்டலன்!

''சமைத்துவிட்டு வருகிறேன் கொஞ்சம் இளைப்பாறுங்கள்'' என்றபடி கயிற்றுக் கட்டிலின் மீது பழைய துணிகளை

## விட்டலனின் பாதங்களை இதமாகப் பிடித்துவிட்டாள் ஜனாபாய்!



அபங்க அமுதம்

தரிலா பண்டரீசா சோர
களா பாந்தோனியா தோர
ஹ்ருதய பந்திகானா கேலா
ஆந்த விட்டலா கோண்டிலா
சப்தே கேலீ ஜடாஜுடீ
விட்டல பாயீ காதலீ பேடீ
ஸோஹம் சப்தாசா மாரா கேலா
விட்டல காகுலதீ ஆலா
ஜனீ ம்ஹணே பா விட்டலா
ஜீவே ந ஸோடீ மீ துலா

- ஜனாபாய்

"கழுத்தில் கயிற்றைக் கட்டி பண்டரியின் திருடனைப் பிடித்துவிட்டேன். இதயத்தைச் சிறையாக்கி அதற்குள் அவனை அடைத்துவிட்டேன். விட்டலனின் கை கால்களில் அவனது திருநாமஒலி எனும் விலங்கை மாட்டினேன். விட்டலா, தந்தையே, நீ என்ன கெஞ்சினாலும் என் உயிர் உள்ள வரை உன்னை விடுவிக்கமாட்டேன்."

வருந்துவது என்பதை நிசரி வழக்கமாகக் கொண்டவள்தான் ஜனாபாய். ஆனால் அன்று அவள் மனத்தில் ஏக்கம் பொங்கியது. 'மற்றவர்களுடன் சாப்பிடும் விட்டலன் என்னை அவர்களோடு உணவருந்த அழைக்கவில்லையே!'

கண்ணீரை அடக்கிக்கொண்டு மீதமிருந்த உணவை எடுத்துக்கொண்டு தனக்கென உள்ள ஓர் அறைக்குள் சென்றாள். அடுத்த நொடியே அவளுக்கு ஆச்சரியம் காத்திருந்தது. "எனக்கும் இரண்டு கவளம் கொடுப்பாயா?" என்று குரல் கொடுத்தபடி அறை வாயிலில் நின்றான் விட்டலன். பின் பதிலை எதிர்பாராது உரிமையுடன் உள்ளே நுழைந்த விட்டலன், இரு கவளங்களை எடுத்து உண்டான். மீதியைச் சாப்பிடச் சொல்லி ஜனாபாயை வற்புறுத்தினான். அத்துடன் நில்லாது அவள் அறையிலேயே உறங்கவும் தொடங்கினான்.

மகிழ்ச்சிப் பரவசத்தில் மூழ்கிய ஜனாபாய்க்கு அன்று சுலபத்தில் தூக்கம் வருவதாக இல்லை. விட்டலனின் பாதங்களை இதமாகப் பிடித்துவிட்டாள்.



# ஜனாபாய் விரித்த பழைய துணி மீது பரந்தாமன் பள்ளிகொண்டான்!

விரித்தாள். பரந்தாமன் அதன் மீது பள்ளி கொண்டான். பக்தை அளித்த எளிய ஆசனம் அவனுக்குப் பாற்கடல் ஆதிசேஷ சயனத்தைவிடச் சுகமாக இருந்திருக்க வேண்டும்.

சமையல் முடிந்தது. நாமதேவர் அவரது குடும்பத்தினர் அனைவருமே விட்டலனுடன் அமர்ந்து உணவருந்தத் தொடங்கினர்.

அனைவருக்கும் பிறகுதான் உண

பின்னர் அசதி பொங்க, ஒரு கட்டத்தில் அவள் கண்கள் மூடிக்கொண்டன. உறங்கத் தொடங்கினாள்.

அந்த உறக்கத்தின் காரணமாக நாள் தோறும் விடியற்காலை எழுந்து தான் செய்ய வேண்டிய ஒரு பணியை மறந்து விட்டாள் ஜனாபாய். ஆனால், நேரம் கடந்துகொண்டிருந்தது.




வண்ணப்படம் : வேதா

படங்கள் : ஸ்ரீஹரி

''ஆகாஷை மறுபடி எங்கேயாவது மீட் பண்ணுனியா?'' என்றாள் பிரமிளா.

அப்பாடா! ஒருவழியாகக் கேட்டு விட்டாள். இந்தக் கேள்வியை அவள் நிச்சயம் கேட்காமல் இருக்க மாட்டாள் என்று அவனுக்கு ஏதோ உள்ளுணர்வு சொல்லிக் கொண்டேயிருந்தது. இதோ கேட்டே விட்டாள். கேட்கும்போது ரொம்பச் சாதாரணமாகத்தான் கேட்டாள். அவள் கேட்காமல் இருந்தால்கூட அவன் ஆகாஷைப் பற்றி அவளிடம் சொல்வதாகத்தான் இருந்தான்.



முன்னிருக்கையிலிருந்த அவளைத் திரும்பிப் பார்த்தான். அவளும் அவனைத் திரும்பிப் பார்த்தாள். அவனால் சிரிப்பை அடக்க முடியவில்லை.

''ஏன் சிரிக்கறே? தேவையில்லாத கேள்வியைக் கேட்டுட்டேனா?'' என்றாள்.

''ஆகாஷைப் பத்தி நீ எப்படியும் என்கிட்ட கேட்பேன்னு தெரியும் பிரமி. பரவாயில்லையே. இத்தனை வருஷம் கழிச்சும் நீ அவனை ஞாபகம் வெச்சிருக்கிறே. ஆகாஷை நான் மறுபடி பார்த்தேன். ஆனால் அவன் என்ன நிலைமைல இருந்தான் தெரியுமா?'' என்றான்.

**சித்ரன்**

அவன் அப்படிச் சொன்னது அவளை இலேசாய்த் திடுக்கிட வைத்தது. குழப்பமாய் அவன் முகம் நோக்கினாள். ''எப்படி இருந்தவன்... எப்படியோ ஆயிட்டான்.''

திடீரென்று அவன் அடுக்கிக்கொண்டே போன சஸ்பென்ஸின் கனம் தாங்காதவளாக பிரமிளா, ''அருண்... இன்னும் இருபது நிமிஷத்தில் ஏர்போர்ட் வந்துடும். ஃப்ளைட் ஏறி பெங்களூருக்குப் போயிடுவேன். அப்புறம் அங்கிருந்து அமெரிக்கா. அங்க போயிட்டேன்னா அப்புறம் ஒரு மாதிரி அங்கேயே ஹஸ்பெண்ட், குழந்தைகள்னு செட்டில் ஆயிடுவேன்னு தோணுது. அதான் ப்ளான். சரி கிடைச்ச கேப்ல எல்லா ஃப்ரெண்ட்ஸையும் ஒரு தடவை பார்த்துட்டுப் போயிடலாம்னு வந்தேன்.''

கொஞ்சம் நிறுத்திவிட்டு போக்குவரத்தை வேடிக்கை பார்த்தபடி மேலும் தொடர்ந்தாள். ''ஆகாஷையும் உன்னை மாதிரி நல்ல ஃப்ரெண்டாதான் நினைச்சேன். ஆனா அவன்தான் எம் மேல காதல் அது இதுன்னு ரொம்ப ஸீன் போட்டான். அதான் அவனைக் கண்டுக்காம விட வேண்டியதாப் போச்சு. அவனுக்கு என்ன ஆச்சுன்னு சொல்லு.''

''சொல்றேன் பிரமி! அதுக்கு முன்னால என்னோட ஒரு கேள்விக்குப் பதில் சொல்லு.''

''கேட்டுத் தொலை.''

அருண் ஸ்டியரிங்கில் தாளம் போட்டபடி, ''உனக்கு ஆகாஷை ஏன் பிடிக்காமப் போச்சு? அவன் ரொம்ப நல்ல டைப்பாதானே இருந்தான்? ரொம்ப அமைதியா அவனுண்டு அவன் வேலையுண்டுன்னு இருப்பான். பேசினாகூட யாருக்கும்

கேக்காது, அவ்ளோ ஸாஃப்ட். ஆளு வேற ரொம்ப ஹாண்ட்சம்மா இருப்பான். பொண்ணுங்க எல்லாம் அவன்கிட்ட வழிஞ்சு போய்ப் பேசுவாங்க. ஆனா அவன்தான் பொண்ணுங்கன்னா கொஞ்சம் கூச்சப்படுவான். உன்னை லவ் பண்றேன்னு உங்கிட்ட சொல்றதுக்கு எவ்ளோ தவிச்சான் தெரியுமா? ஆனா அவன் லக்கி ஃபெல்லோ. நல்லவேளை நீ அவன் காதலை ஏத்துக்கிட்டு அவனுக்கு வாழ்க்கை கொடுக்கலை. இப்ப நீ ரெண்டு மடங்கு குண்டாகி மாமி மாதிரி ஆயிட்டே. தப்பிச்சான் அவன்!'' என்று பலமாகச் சிரித்தான். பிரமிளா அவனைப் பொய்யாக முறைத்து, ''இந்தக் கிண்டலெல்லாம் வேணாம். நீ மட்டும் என்ன?'' என்றாள். அப்புறம் கொஞ்சம் ஸீரியஸசாக நெற்றியைத் தேய்த்து யோசித்தாள்.

''ஆகாஷ் ரொம்ப நல்லவன்தான். அவன் என்னை லவ் பண்றேன்னு தயங்கித் தயங்கி லெட்டர் எழுதினப்போ, அவன் மேல லேசா க்ரஷ் மாதிரி ஏதோ ஒரு எழவு எனக்கும் கூட வந்துச்சு. அது சும்மா லேசாதான். ஆனா அவனோட கூச்ச சுபாவம் இருக்கு பாரு. அதான் பிரச்னையே. அது என்ன... பொம்பள ஆம்பளன்னு யார்கிட்ட பேசறதுன்னாலும் அப்படித்

# நீரோட்டம்!



நயங்கறது? ஸ்விம்மிங்பூல்-க்குப் போனாக் கூட சட்டையைக் கழற்றக் கூச்சப்படு வான்னு ராஜு ஒரு தடவை சொல்லிக் கேள்விப்பட்டிருக்கேன். அது தவிர புவர் கம்யூனிகேஷன் ஸ்கில்ஸ். அது எனக்கு ஒத்துவரும்னு தோணலை. நான் முழுக்க முழுக்க அப்பா கவனிப்பில் வளர்ந்த பொண்ணு. அவரோட கம்பீரம், தோரணை யெல்லாம் பார்த்துப் பழகின பொண்ணு. தன் அப்பா மாதிரி இருக்கிற கணவரைத் தான் பொண்ணுங்க விரும்புவாங்கன்னு எங்கேயோ படிச்சிருக்கேன். நானும் அப் படித்தான் விரும்பினேன். ரொம்ப பிராக்டிகலா அவர் மாதிரி ஒரு ஆளை ஹஸ்பண்டா கற்பனை பண்ணினேன். ஆகாஷ் மாதிரி கூச்ச சுபாவமான பசங்க எனக்குக் கொஞ்சம் அலர்ஜி. அதெல்லாம் என் கேரக்டருக்கு ஒத்துவராதுன்னு தோணிச்சு. அப்பா ஒரு நல்ல பிஸினஸ் மேனா பார்த்துக் கல்யாணமும் பண்ணி வெச்சுட்டார். அப்புறம் அவன் என்ன பண்ணினான்னு எனக்கு நிஜமாவே தெரி யாது. தாடி விட்டுட்டு அலைஞ்சானா?''

சில நிமிடங்கள் இருவரும் மௌன மாயிருந்தார்கள். கார் கத்திப்பாரா ஜங்ஷ னைக் கடந்து விரைந்தது.

''பிரமி... நீ சொல்றது கொஞ்சம் லாஜிக்கலாதான் இருக்கு. இந்த லவ் சமாசாரமெல்லாம் ரெண்டு சைடும் இருக்க வேண்டிய அவசியமில்ல. ஆனா அவன் உன்னை நெனைச்சு ரொம்ப உருகினான். தாடி வளர்த்தானான்னு ஞாபகமில்லே. நான்கூட அவன் சார்பா உன்கிட்ட பேச லாம்னு நினைச்சிட்டிருந்தேன். ஆனா 'தோ'ன்னு சுதாரிக்கறதுக்குள்ள நீ மேரேஜ் இன்விடேஷன் நீட்டிட்டே. ஒண்ணும் செய்ய முடியாம போச்சு. ப்ச்! அவன் உடைஞ்சு போய் ரொம்ப அழுதான்னு நினைக்கிறேன்.''

''ஓ'' என்று இலேசாய் வருத்தம் காட்டி னாள்.

அதைக் கவனித்துவிட்டு அருண் அவ ளிடம் கேட்டான். ''ஆனா பிரமி... உங் கிட்ட ஒண்ணு கேக்கறேன். நீ நினைக்கிற மாதிரி எல்லாரும் எல்லா சமயத்திலேயும் ஒரே மாதிரி மாறாம அப்படியே இருப் பாங்கன்னு நினைக்கறியா?''

அருணின் கேள்வி புரியாததுபோல புருவங்கள் நெறித்துப் பார்த்தாள்.

''அதாவது... இப்போ நீ நம்ம ஸ்வாதியை எடுத்துக்கோ. அவளை மாதிரி பயந்தாங்கொள்ளியை உலகத்திலேயே பார்க்க முடியாது. அவளுக்கு வேடி தெனாலினு பேர் வெச்சிருந்தோம். ஞாபக மிருக்கா?''

''தெரியும். அவளுக்கு என்ன இப்ப?''

''அவ திடீர்னு பி.ஈ. படிக்கணும்னு முடிவு பண்ணி தஞ்சாவூர் என்ஜினீயரிங் காலேஜ்ல சேர்ந்தா. நாலு வருஷம் ஹாஸ் டல்ல தங்கிப் படிச்சா. கோயமுத்தூருக்கும் தஞ்சாவூருக்கும் தனியா ட்ராவல்



பண்ணுவா. அப்புறம் ஒரு ஸாஃப்ட்வேர் கம்பெனில ஜாயின் பண்ணி அங்கிருந்து ஒரு ப்ராஜக்ட்டுக்கு நியூஜெர்ஸி போய் தனியா ஒரு வருஷம் இருந்தா. அப்பா அம்மாவை எதிர்த்துக்கிட்டு ஒரு கிறிஸ்டியன் பையனைக் கல்யாணம் பண்ணிக்கிட்டா...''

''ஓ... ஈவிட்? நிஜமாவா? அவளா?'' ஆச்சரியத்துடன் கேட்டாள் பிரமிளா.

''அது ஆச்சு நாலஞ்சு வருஷம். நான் என்ன சொல்ல வர்றேன்னா... யார் எப்போ எப்படி மாறுவாங்கன்னு யாராலயும் சொல்ல முடியாது.''

''அப்ப ஆகாஷூம் மாறிட்டான்னு சொல்ல வர்றியா?''

''அஃப்கோர்ஸ்.''

மீனம்பாக்கம் விமான நிலையம் வந்துவிட்டிருந்தது. இருவரும் காரை விட்டு இறங்காமல் அப்படியே உட்கார்ந்திருந்தார்கள். தொண்டையைச் செருமிவிட்டு ஒரு புதிரான புன்னகையுடன், ''ஆகாஷை நான் பார்த்தேன்னு சொன்னேன் இல்லையா? ஆனால் அவனை நான் நேர்ல பார்க்கலை... ஆனா அவனை அப்படிப் பார்த்து ஷாக் ஆயிட்டேன்! எப்படியிருந்தவன் எப்படியாகிட்டான்னு ஒரே ஆச்சரியம்.''

''ஐயா சாமி! திரும்பத் திரும்ப இதையே சொல்லாதே. சஸ்பென்ஸ் போதும். சீக்கிரம் விஷயத்துக்கு வா. எனக்கு டைம் ஆகுது.''

அருண் தயக்கச் சிரிப்புடன், ''ஒருநாள் ஒரு கடைல போய் இன்னர் வேர் வாங்கினேன். அதோட பேக்கிங் அட்டைப் பெட்டில...'' என்று சொல்லிக்கொண்டே பின் சீட்டிலிருந்து அதை எடுத்தான்.

அவன் நீட்டின அட்டைப் பெட்டியின் மேற்புற கவர் டிசைனில் ஆகாஷ் கட்டான வெற்றுடம்புடன் கொஞ்சமும் கூச்சமில்லாமல், இடுப்பில் மட்டும் உள்ளாடை அணிந்து ஸ்டைலாகச் சிரித்துக் கொண்டிருந்தான். ●

## ஜெமினி போல நானும்

'மோதி விளையாடு' படத்தில் ஹீரோ வினய்யோடு கூட விளையாண்டவர்தான் நடிகர் யுவா. தமிழ் சினிமாவுக்கு யுவா புதிது என்றாலும், கேரள சினி உலகத்தில் மனிதர் பழம் தின்று கொட்டை போட்டவர். 'மோதி விளையாடு' படத்தில் அமைதியான பாத்திரத்தில் அளவோடு விளையாண்டிருந்தாலும், அவருடைய ஆசையெல்லாம் ஹீரோவாக களத்தில் விளையாடுவதுதானாம். "எனக்கு தமிழ் சினிமாவில் முதல் ப்ரண்டுன்னா அது நடிகை லக்ஷ்மிராய்தான். அவங்கதான் என்னை எல்லார்கிட்டயும் அறிமுகப்படுத்தி வைச்சாங்க. அவங்ககூட நான் ஹீரோவா நடிக்கறது இப்போதைய லட்சியம். தமிழ் சினிமாவுல ஜெமினி கணேசன் போல ரொமான்ஸ் ஹீரோவாக ஆகணும்ங்கறதுதான் என்னோட விருப்பம். காலம் அதை நிறைவேத்தி வைக்கும்னு காத்திருக்கேன்" என்னும் யுவா, ஆங்கில இலக்கியத்தில் முதுகலை பட்டம் பெற்றவர். கூடவே கராத்தேயில் பிளாக் பெல்ட்டாம்!

- அதிதி

எதிர்ப்புறம் : யுவா

# சேலை அணியும் ஜாதிப்பூ!

ஒரு பெண் மிக அழகாக, ஸ்டைலாக அதே சமயம் பாரம்பர்ய டச்சுடன் தெரிவது எப்போது? எந்த நிறத்தினருக்கும் தோற்றத்துக்கும் வயதினருக்கும் வஞ்சனையில்லாமல் அழகை அள்ளித் தருவது எது?

''இதென்ன கேள்வி? புடைவைதான். எங்களுக்குத் தெரியாதா?'' புடைவையை நீவி விட்டுக்கொண்டே பேசும் பெண்களே... புடைவை வாங்கும் முன்பும் வாங்கிய பின்பும் சில டிப்ஸ்...

★ உடல்வாகுக்குத் தக்கவாறு புடைவை செலக்ட் செய்ய வேண்டும். 'இந்த சீஸனுக்கு இந்த மாதிரி புடைவை ஹிட். அதனால வாங்கினேன்' என எல்லோரும் வாங்குவதையே வாங்காதீர்கள். வித்தியாசமான கலர், வித்தியாசமான சாரி... இதுதான் உங்களுடைய ஸ்டைல் மந்த்ரா!

★ சற்றுப் பருமனாக இருப்பவர்கள் ஜார்ஜெட், ஷிஃபான், சினான் போன்ற சேலைகளைக் கட்ட வேண்டும். மைசூர் க்ரேப்பும் அணியலாம். உடலுடன் ஒட்டிக் கொண்டிருக்க வேண்டும். ஸ்லிம்மாகக் காட்சியளிப்பீர்கள்.

★ அதிக உயரம் இல்லாத பெண்கள் பார்டரே இல்லாத புடைவை அல்லது மிக மெல்லிய பைப்பிங் பார்டர் புடைவைகளை அணியலாம். பெரிய்ய பார்டர் போட்ட செட்டி நாட்டு புடைவை, கங்கா-ஜமுனா புடைவைகளைத் தவிர்க்கவும்.

★ ஒல்லியாக இருக்கும் த்ரிஷா டைப் பெண்கள் (கொடுத்து வைத்தவர்கள்) தாராளமாக காட்டன் புடைவை கட்டலாம். கஞ்சி போட்டு ரோல் பிரஸ் செய்த பெங்கால் காட்டன், கஞ்சி காட்டன், மதுரை காட்டன் என வெரைட்டியாக கட்டி, ஜார்ஜெட் டைப் பெண்களை எரிச்சல்படுத்தி குஷிப்பட்டுக் கொள்ளவும். காட்டன் மட்டுமல்லாது ஆர்கன்ஸா, டிஷ்யூ, டஸ்ஸார் சில்க் போன்ற புடைவைகளையும் கட்டலாம்.

★ பிரிண்டட் புடைவைகளென்று பார்த்தால் காட்டன், பூனம், ஜார்ஜெட்



எல்லாவற்றிலும் டிஸைன் உண்டு. கூடியவரை பெரிய்ய சைஸ் டிஸைன்கள், பூக்களைத் தவிர்க்கவும். 'ஒரு மாதிரி காடியான டேஸ்ட் உள்ள பெண், கச்சா முச்சா டிஸைனைப் போய் எப்படித்தான் கட்டறாளோ'... என மற்றவர்கள் நக்கலடிப்பார்கள். கவனம்!




★ 'நாம் கலரா இல்ல... அதனால டார்க் கலர் புடைவை நமக்குப் பொருந்தாது' என நினைத்தீர்களானால் தவறு. மெரூன், பச்சை, மெஜந்தா போன்ற நிறங்கள்தான் உங்களுக்கு மாட்ச்சாகும். ஸோ, கட்டுங்க, கலக்குங்க.

★ ஆஃபீஸுக்குப் புடைவை கட்டிப் போகும் பெண்கள் நீட்டாக பின் பண்ண வேண்டும். கம்ஃபர்டபிளாக ஸ்மார்ட்டாகத் தோன்ற வேண்டுமானால் பளிச்சென்று பின் பண்ணியிருக்க வேண்டும்!

★ திருமணம், பார்ட்டி, பிக்னிக், அவுட்டிங், எத்னிக் டே.... (புடைவை கட்டி ஸ்டைல் அடிக்கத்தான் எத்தனை தருணங்களோ?) அன்று புடைவையை காஷுவலாகக் கட்டவும். மேல் பக்க பார்டரை ப்ளவுஸுடன் பின் செய்து கீழ் பக்கத் தலைப்பை அப்படியே ஓரமாக விடவும்.

★ பின் செய்வதை முன் பக்கமாகச் செய்யாமல் (இதென்ன விகத்தன ஐடியா?) பின் ஷோல்டரில் செய்யவும். பின் முன், முன் பின் இதென்ன டிப்ஸ் என விழிக்காதீர்கள். பின்னைப் பின்னாடி போடவும்... சிம்பிள்!

★ காட்டன் மற்றும் டிஷ்யூ புடைவைகளை அயர்ன் பண்ணாமல் கட்டாதீர்கள். லுக் வராது.

★ சில்கி சாரி வாங்கும்போது கவனம் தேவை. மென்மையான பட்டா என்பது கையால் நீவினாலே தெரிந்துவிடும். முதல் தடவை ட்ரை வாஷ்தான் செய்ய வேண்டும்.

★ முதல் தடவை துவைக்கும்போது உப்புத் தண்ணீரில் நனைத்து வைக்கவும். பிறகு குளிர்ந்த நீரில் அலசவும்.

★ அதிக நேரம் சோப்பில் ஊற வைக்காதீர்கள்.

★ மாதமொருமுறை பட்டுப்புடைவைகளை எடுத்து உதறி வேறுவிதமாக மடித்து வைக்கவும். இதனால் ஜரிகை பல வருடங்கள் பளபளப்பாக இருக்கும்.

★ வெரைட்டியாக புடைவை வைத்திருக்கவும். பட்டுப் புடைவை, மைசூர் க்ரேப், பாந்தினி, குந்தன், ஆரி வொர்க் சேலைகள், ப்ரின்டட் சில்க் மற்றும் க்ரேப், டிஸைனர் சாரீஸ், பெங்கால் காட்டன், நாராயணபேட், பூனா காட்டன், கோட்டா, லக்னோ சிக்கன்... (சீனப் பெருஞ்சுவரை விட நீளமாகப் போகும் புடைவை வெரைட்டிகள்)... என வேளைக்கொன்றாக பண்டிகைக்கு ஏற்றவாறு கட்டி அசத்துங்கம்மா...

- லதா சேகர்

## சமாளிப்பு!

வீட்டுக்கு வந்த நீண்ட நாள் நண்பனை விருந்தோம்பி அனுப்பும்போது அவன் சொன்னான்:

"வீடு சூப்பரா இருக்கு. ஆனா வீட்டுக்குப் பக்கத்துலயே ரைஸ் மில் இருக்கு. அதான் வீட்டுக்குப் பெரிய மைனஸ்."



"அப்படிச் சொல்லாதே. அதுவும் ஒரு வகைல ப்ளஸ்தான்."

"எப்படிச் சொல்றே?"

"என் மனைவி கொஞ்சம் கோபக்காரி. சின்னச் சின்ன விஷயத்துக்கெல்லாம் சண்டை போடுவா. காட்டுக்கத்தல் கத்துவா; பாத்திரத்தை உருட்டுவா. இந்தச் சத்தம் கேட்டா பக்கத்து வீட்டுக்காரங்க எங்களை ரொம்பக் குறைச்சலா எடை போட்டுடுவாங்க. ரைஸ் மில் பக்கத்துல இருக்கறதால இப்ப பிரச்னை இல்லை."

# காமெடி

## வசூல்

சாம பேத தண்ட முறைகள் எல்லாம் பயனில்லாமல் போயின. கொடுத்த கடனை வசூலிக்கவே முடியவில்லை. கடன் கொடுத்த கிருஷ்ணனும் இல்லாத தகிடுதத்தம் எல்லாம் செய்து பார்த்தான்; கெஞ்சிப் பார்த்தான்; மிஞ்சிப் பேசினான். கொஞ்சிப் பார்த்தான். ம்ஹூம் பத்து பைசா பெயரவில்லை. கடைசி முயற்சியாக ஒரு கடிதம் எழுதினான். கடிதத்துடன் அவனது ஒரே மகளின் ஃபோட்டோவை இணைத்து, அனுப்பினான்.



பின்குறிப்பாக இந்தப் பெண்ணின் எதிர்காலம் கருதியாவது கடனைத் திருப்பித் தாருங்கள் என்று எழுதினான். கடன் வாங்கிய ராமனிடமிருந்து பதில் வந்தது.

'எனக்கும் கடனைத் திருப்பித்தர ஆசைதான். இயலாமைக்குக் காரணம் என் மனைவியின் பேராசைதான். அவளுடைய தேவையை நிறைவேற்றவே என் சம்பளம் சரியாக இருக்கிறது. இந்தக் கடிதத்துடன் அவள் ஃபோட்டோவையும் இணைத்துள்ளேன்' என்றது கடிதம்.

## சி.பி.செந்தில்குமார்

# கதைகள்

### புத்திசாலி

எக்ஸாமில், 'சோடியம் குளோரைடு- விளக்கவும்' என்ற கேள்விக்கு சதீஷுக்கு விடை தெரியவில்லை. பதில் எழுதினான். 'இந்த உலகத்தைப் படைச்சது கடவுள்தான். அதனால கடவுள்தான் அந்த சோடியம் குளோரைடையும் படைச்சிருக்கணும்.' பேப்பர் திருத்திய



டீச்சர் பின்குறிப்பாக எழுதினார்: 'சோடியம் குளோரைடைப் படைச்ச கடவுளிடம் எப்படி உருவாக்கினீர்கள் என்று கேட்டேன். அவரும் பதில் சொன்னார். அதனால் கடவுளுக்கு ஃபுல் மார்க்ஸ் கொடுத்துட்டேன். உனக்கு ஜீரோ மார்க்.'

### உஷார் பார்ட்டி

ஒரு சினிமாக் கொட்டகையின் மானேஜருக்கு முன்னால் கைகட்டியபடி வந்தவன், அங்கே தனக்கு ஏதேனும் ஓர் அலுவல் போட்டுத் தருமாறு பணிவோடு கேட்டுவிட்டு நின்றான். அவனைப் பார்த்தார் மானேஜர். அவன் உடல் கட்டுக்கோப்பாக இருந்தது. மானேஜர், சுழல் நாற்காலியில் சுழன்று உட்கார்ந்து கொண்டே, வேலை கேட்க வந்தவனைப் பார்த்துக் கேள்விகளைப் போட்டார்.



''திடீரென்று சினிமா கொட்டகையில் தீப்பிடித்தது என்று வைத்துக் கொள். அப்போது நீ என்ன செய்வாய்?''

''அதைப் பற்றியெல்லாம் உங்களுக்குக் கொஞ்சம் கூடக் கவலையே வேண்டியது இல்லை. கொட்டகையிலிருந்து வெளியேறுகிறவர்களுள் நான் முதலாவதாக இருப்பேன்'' என்றான் வேலைக்கு வந்த ஆள்.

# பத்திரமா பார்த்துக்கங்க..!

"பால் அதிகமாகச் சாப்பிடறது பற்களுக்கு நல்லது. பாலைச் சாப்பிட்டுவிட்டு அப்படியே விட்டுவிடுவதுதான் நல்லதில்லை'' என ஆரம்பிக்கிறார் அடையாறு பரசு டென்டல் ஹாஸ்பிடலின் பல் மருத்துவர் யஷ்வந்த்.



**பாப்பாவின் பற்கள்:**

''இன்னைக்கு நம்ம நாட்டுல பள்ளிக்கூடம் போற குழந்தைகள்ல 95 சதவிகித பேருக்குப் பல் சொத்தையாத்தான் இருக்கு. பல தாய்மார்கள் குழந்தை பிறந்த மூன்றாவது மாதத்திலிருந்தே, குழந்தைகளோட பற்களை, தங்களை அறியாமலே கெடுத்து விடுகிறார்கள். நடுராத்திரியில் குழந்தை அழுதால், சமாதானப்படுத்துவதற்காக அதன் வாயில் ஃபீடிங் பாட்டிலை அப்படியே சொருகி விடுவார்கள். இரவு முழுக்க அந்தக் குழந்தை விடாமல் சப்பிக் கொண்டேயிருக்கும். பால் பற்கள், முளைப்பதற்கு முன்பாகவே வாயில் தங்கியிருக்கும் பாலால் சொத்தைப் பற்களாகிவிடுகின்றன. இதைத்தான், நாங்கள் நர்ஸிங் பாட்டில் கேரிஸ் என அழைப்போம்.



ஆறு மாதத்திலிருந்தே குழந்தை பால் குடித்து முடித்தவுடன் அவர்களது வாயை (ஈறுகளை) ஈரப் பஞ்சால் துடைக்க வேண்டும். பெரியவர்களும் சாப்பிட்டவுடன் வாயை நன்றாகக் கொப்பளித்துவிட வேண்டும். இரவு தூங்குவதற்கு முன்பு பல் துலக்குவது உடலுக்கும் நல்லது.

**பரிசோதனை?**

ஆறு மாதங்களுக்கு ஒருமுறையோ அல்லது குறைந்தபட்சம் வருடத்துக்கு ஒருமுறையோ கட்டாயம் பல் மருத்துவரிடம் பற்களைப் பரிசோதித்துக் கொள்ள வேண்டும். சொத்தைப் பல்லாகவே இருந்தாலும் அதை ஆரம்ப நிலையிலேயே கண்டுபிடித்து வைத்தியம் செய்து விட்டால், வலியே இருக்காது. அதை நீண்ட காலம் அப்படியே விட்டுவிட்டால் வரும் பின் விளைவுகள் ஏராளம்.

**பற்களின் எதிரி:**

வேலைக்குப் போகும் பெண்கள், தங்கள் பற்களைச் சீர்செய்துகொள்ளக் காட்டும் ஆர்வத்தை, வீட்டில் இருக்கும் பெண்கள் காட்டுவதில்லை. ரொம்ப சூடான பதார்த்தத்தையோ, ரொம்ப குளுமையான உணவையோ சாப்பிடக் கூடாது. சூடும் குளுமையும் பற்களுக்கு ஆகாது!

**வெண்மையான பற்களுக்கு?**

பல் மருத்துவரிடம் சென்று ப்ளீச்சிங், ஸ்கேலிங் முறைப்படி பற்களை எழுபத்தைந்து சதவிகிதம் வெண்மையாக மாற்றலாம். பற்பசைகள் மட்டுமே கொண்டு பற்களை நூறு சதவிகிதம் வெண்மையாக்கிவிட முடியாது; செய்யவும் கூடாது!

**தடா!**

வெற்றிலை, பாக்கு; சுண்ணாம்பு, புகையிலை போன்றவற்றை மென்று விட்டு நீண்ட நேரம் வாயிலேயே வைத்துக் கொண்டிருந்தால், அவ்விடத் தில் புற்றுநோய் வரும்; பற்களிலும் கறை படிந்துவிடும். குளிர்பானங்களும் பற்களில் படவே கூடாது. பல்லில் ஒட்டும் சிப்ஸ், ஐஸ்க்ரீம் போன்றவற்றுக்கு, கூடிய மட்டும் தடா போடுங்கள்!

**வலுவான பற்களுக்கு?**

சரியான முறையில் பல் துலக்கவேண்டும். மூன்று மாதங்களுக்கொருமுறை டூத் பிரஷ் மாற்ற வேண்டும். எந்த உணவையும் நன்கு மென்று உண்ண வேண்டும், இரு வேளையும் பல் துலக்குவதைப் பழக்கிக் கொள்ள வேண்டும். இது போதும், உங்கள் பற்கள் பக்காவாக இருக்க'' என்கிறார் யஷ்வந்த்.

**செய்தி, படம்:**
**சம்பத்குமார்**






# எங்கள் தலைவா... எதிர்கால

கு.ஞானசம்பந்தன்

'தலைவா வா...
தலைமை ஏற்க வா!'
'எங்கள் தலைவா...
எதிர்கால இறைவா!'
'தங்கத் தலைவா...
தானைத் தலைவா!'

நானும் என் நண்பரும் அதிகாலை நேரத்தில் இளந்தென்றலை அனுபவித்தபடி நடந்தபோது, 'கட் அவுட்'களிலும், 'வால் போஸ்டர்'களிலும், 'டிஜிட்டல் பேனர்'களிலும் மேற்குறித்த வாக்கியங்கள் எங்கள் கண்களைக் கவர்ந்தன.

''அடேங்கப்பா எத்தனை தலைவா! இதுக்கு மேலேயும் வேற தலைவர்கள் இருக்கிறார்களா?'' ஆச்சரியத்துடன் கேட்டார் நண்பர்.

''நிச்சயம் இந்தக் காலத்தில் 'மக்கள் தலைவர்' என்று நாம் சிலரை அழைப்போம். கல்வெட்டுக்களிலும், செப்பேடுகளிலும் 'ஜனநாதன்' என்ற பெயர் காணப்படுகிறது. 'ஜனநாதன்' என்றாலே மக்களின் தலைவன் என்றுதான் பொருள். தஞ்சைக் கோயிலைக் கட்டிய முதலாம் இராஜராஜ சோழனுக்கு 'ஜனநாதன்' என்ற பெயர் உண்டு'' என்று நான் சொல்ல, ''அப்படியா? நடைப்பயிற்சி செய்வதைப் பற்றி யாராவது பாடியிருக்காங்களா?'' என்று ஆர்வமாய்க் கேட்டார் நண்பர்.

நான் யோசித்துக் கொண்டிருக்கும் போதே, ''என்ன இதற்குப் போய் இப்படி யோசிக்கறீங்க, நம்ம ஒளவையார் பாடியிருக்கிறதா நான் கேள்விப்பட்டேன்'' என்று அவர் சொல்ல, நான் ஆச்சரியத்துடன், ''அப்படி ஒரு பாடலை நான் கேள்விப்பட்டதே இல்லையே'' என்றேன்.

'' 'வாக்'குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள் 'நோக்'குண்டாம்'' என்று சொல்லி நிறுத்திய நண்பர், ''இதில் 'வாக்' உண்டாம் என்ற சொல்லில் 'வாக்' என்றால் நடை, அதாவது நடைப்பயிற்சி வேண்டும். அது எனக்கு மட்டுமில்லை. 'நோக்கு' உண்டாம். உனக்கும் நடைப் பயிற்சி வேண்டும். நடந்தால் நல்ல மனம் உண்டாகும்'' என்று நண்பர் சொல்ல, நான் வியந்து போனேன்.

அப்போது ஓட்டப் பயிற்சியில் ஈடுபட்டிருந்த இரண்டு இளைஞர்கள் எங்களைப் பார்த்தவுடன், எங்களுக்குக் காலை வணக்கம் சொல்லியபடி எங்களோடு சேர்ந்து கொண்டார்கள். இரும்பவும் எங்கள் பேச்சு 'தலைவர்' என்ற வார்த்தைக்கே திரும்பியது. ''சரி... தலைவர்கள் யார் யார்னு சொல்லுங்க...'' என்றார் நண்பர்.

''மக்கள் தலைவர், தேசியத் தலைவர், திராவிடத் தலைவர், தமிழினத் தலைவர், பெருந்தலைவர், புரட்சித் தலைவர்...'' என்று நான் தலைவர்களை எல்லாம் வரிசைப்படுத்தினேன்.

''எங்க 'தலை'ய விட்டுட்டீங்களே தலைவா'' என்று அந்த இளைஞர்கள் ஒரே குரலில் சொன்னார்கள்.

'' 'தலை' இருக்கறவங்க எல்லாம் தலைவர்தானா? உண்மையில் தலைவர் என்பவர் யார்?'' என்று சோகமாகக் கேட்டார் நண்பர்.

**''ஊழி பெயரினும் தான்பெயரார் சான்றாண்மைக்கு**

**ஆழி எனப்படு வார்**

என்று திருவள்ளுவரே சொல்லியிருக்கிறார்'' என்று நான் சொல்லவும், திடுக்கிட்ட நண்பர், ''ஏதேது... ஒரு அன்புக்காக உங்களோடு நடந்து வந்தா தொடர்ந்து வரவிடமாட்டீங்க போல இருக்கே. புரியாத பாட்டு, அது இதுன்னு ரொம்ப கவலைப்பட வைக்கிறீங்களே...'' என்றார் பதற்றத்துடன்.

அதற்குள், அந்த இளைஞர்களில்

# இறைவா..!

ஒருவர், 'ஸார் நீங்க சொன்னது திருக்குறள்னு தெரியுது. ஆனா பொருள் என்னன்னு புரியல. அதுமட்டுமில்லை 'தலைவர்', 'தலைமைப் பண்பு' இதுக்கும் நீங்க சொன்ன குறளுக்கும் தொடர்பு உண்டா?'' என்று கேட்டார்.

நாங்கள் நடந்து கொண்டிருந்த பாதைக்கு அருகில் இருந்த சிமெண்ட் பெஞ்சில் நண்பர் உட்கார, நானும் உட்கார்ந்து கொள்ள, இரண்டு இளைஞர்களும் நின்ற இடத்திலேயே இலேசாக 'ஜம்பிங்' செய்தபடி, நான் சொல்வதைக் கேட்கத் தயாரானார்கள்.

''தலைமைப் பண்பு என்பது என்ன? ஆழமான அறிவு, திடமான மனது, முடிவெடுக்கும் திறன், எடுத்த முடிவிலிருந்து எப்போதும் பின்வாங்காத தைரியம் கொண்டவர்களே தலைமைப் பண்பு மிக்க தலைவர்களாக உருவெடுப்பார்கள். நான்






சொன்ன திருக்குறளிலும் இதே கருத்து தான் வருகிறது'' என்றதும், அந்த இளை ஞர்களும் சுவாரஸ்யமாய்க் கேட்டார்கள்.

''அரிய சம்பவம் சொல்கிறேன் கேளுங் கள். சர்தார் வல்லபாய் படேல் வெற்றிகர மான வழக்கறிஞராகத் திகழ்ந்தவர். ஒரு நாள் நீதிமன்றத்தில் கொலைக்குற்றம் சாட்டப்பட்ட தம் கட்சிக்காரருக்காகக் கடுமையாக வாதிட்டுக் கொண்டிருந்த நேரம். அப்போது, அவருடைய உதவி யாளர் அவரிடத்தில் ஒரு கடிதத்தைப் பதற் றத்தோடு கொடுக்க, அதில் எழுதப்பட்டி ருந்த செய்தியை ஒரு நிமிடம் படித்து விட்டு மேற்கொண்டு தம் வாதத்தைத் தொடர்ந்தார் படேல்.

பிற்பகல் மூன்று மணிக்கு அவரது பணி முடிந்தது. நீதிபதியைப் பார்த்து, 'கனம் நீதிபதியவர்களே நான் விடை பெறலாம் என நினைக்கிறேன்' என்றார்.

உடனே நீதிபதியும், 'ஏதேனும் அவசரச் செய்தியா?' என்று கேட்க, 'ஆம் உடல் நலமின்றி இருந்த என் துணைவியார் காலையில் இறந்துவிட்டதாகத் தகவல் வந்தது' என்றதும் நீதிமன்ற வளாகமே திடுக்கிட்டுப் போனது. நீதிபதியும் வேத னையோடு, 'நீங்கள் இதை அப்போதே தெரிவித்துவிட்டுச் சென்றிருக்கலாமே' என்றார்.

'என் துணைவியார் உயிர் எனக்கு எவ்வளவு முக்கியமோ, அதுபோல என் கட்சிக்காரரின் உயிர் அவர் குடும்பத்துக் கும் எனக்கும் முக்கியம்' என்று சொன்னா ராம் படேல்'' என்று நான் சொன்னபோது, அந்த இளைஞர்கள் சற்று கலங்கித்தான் போனார்கள்.



**ஜனநாதன் என்றால் மக்களின் தலைவன் என்று பொருள். ராஜராஜ சோழனுக்குக்கூட அப்பெயர் உண்டு!**

அந்தச் சூழலை மாற்ற எண்ணி, ''இதை நம் இலக்கியத்திலேயே சொல்லியிருக்கிறார்கள். காட்டின் நடுவே காற்றில் அசைந்தபடி இருக் கும் சிறிய செடி கூட பிற்காலத்தில் யானையைக் கட்டிவைக்கும் கட்டு மரமாக மாறுமாம். அதுபோல மனி தர்களே, எளியோராய் இருக்கிறோம் என எப்போதும் எண்ண வேண் டாம். வலிமையான வர்களாக, தலைவர் களாக நீங்களும் மாற வாய்ப்பு உள்ளது என அந்தப் பாடல் சொல் கிறது'' எனச் சொல்லி,

**'' 'ஆடுகோ டாகி<br>அதரிடை நின்றதூஉங்<br>காழ்பட்ட கண்ணே களிறிணைக்குங்<br>கந்தாகும்<br>வாழ்தலு மன்ன தகைத்தே,<br>ஒருவன்றான்<br>தாழ்வின்றித் தன்னைச் செயின்'**

என்பதுதான் அந்த நாலடியார் பாட்டு'' என்றேன்.

''ஆஹா! மசால் வடைக்கான வாய்ப்பு தெரிகிறது'' என்றார் நண்பர் மூச்சை இழுத்து முகர்ந்தபடி... சற்று தொலைவில் வடை விற்பவர் வந்து கொண்டிருந்ததைப் பார்த்து, இளைஞர்கள் உதடுகளில் மெல்லிய சிரிப்பு!

**(தொடரும்)**

# ப்ராஜக்ட் சிரஞ்சீவி!




'ப்ராஜக்ட் சிரஞ்சீவி'

ஏதோ ஆந்திர அரசியல் மேட்டர்னு நினைச்சுடாதீங்க. உலகத் தாய்ப்பால் வாரத் தைக் கொண்டாடுவதற்காக சென்னை, பள்ளிக்கரணையிலுள்ள டாக்டர் காமாட்சி நினைவு மருத்துவமனை, அண்மையில் சிறிய கையேட்டை வெளியிட்டது.

''புதிதாகப் பிறந்த குழந்தையைத் தாயின் வயிற்றில் விட்டுவிட்டால் அது தானாகவே மெல்ல மெல்ல ஊர்ந்து போய் பால் பருக மார்பகத்தைப் பற்றிக்கொள் ளும். இதற்கு 'பிரெஸ்ட் க்ராஸ்' என்று பெயர்'' என்றார் டாக்டர் ராஜேஸ்வரி.

கையேட்டை வெளியிட்ட தமிழ்நாடு அரசின் தலைமைச் செயலாளர் கே.எஸ். ஸ்ரீபதி, ''தாய்ப்பால் ஊட்டுவது தாய்-குழந்தை, தந்தை - இவர்களிடையே பாசப் பிணைப்பை உண்டாக்கும். உறவை வலுப் படுத்தும்'' என்றார். கூட்டுக் குடும்ப முறை யின் சிதைவால், குழந்தை வளர்ப்பு பாதிப் படைந்துள்ளது பற்றியும் குறிப்பிட்டார்.

ஆகஸ்ட் முதல், இரண்டாம் வாரங் களில் நடைபெறுகிற இந்த உலகத் தாய்ப் பால் தினத்தை ஒட்டிய வழிகாட்டுத் திட்டத் துக்கு, 'ப்ராஜக்ட் சிரஞ்சீவி' என்று பெயரிட்டிருக்கிறார்கள்.

தொடக்க விழாவை ஒட்டி, புட்டிப் பால் புகட்டுவதைத் தவிர்க்க வேண்டுவது உட்பட, சில கருத்துக்களை வைத்து ஓரங்க நாடகங்கள், தாய்மார்களுடன் கலந்துரை யாடல், விளக்கக் காட்சிகள் எல்லாம் ஏற்பாடாகியிருந்தன. இந்தத் திட்டத்தின் தொடர்ச்சியாக ஒவ்வொரு மாதமும் இரண் டாம் புதன் கிழமையில், கருவுற்ற தாய்மார் களுக்கு இலவச மருத்துவ சோதனைக்கும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

டாக்டர் டி.ஜி.சிவரஞ்சனி, டாக்டர் பி.ரகுராமன், டாக்டர் பழனிகுமார், டாக்டர் மீனாட்சி கிருஷ்ணன், டாக்டர் பபிதா பானு ஆகியோரின் கட்டுரைகள் அடங்கியுள்ள 'ப்ராஜக்ட் சிரஞ்சீவி' கையேடு, ஒவ்வொரு தாயின் கைகளிலும் குழந்தையோடு சேர்ந்து தவழ்வது அவசியம்!

**- சுப்ர.பாலன்**

கோவை குனியமுத்தூர் ஸ்ரீகிருஷ்ணா கலை அறிவியல் கல்லூரியில் எட்டிப் பார்த்த போது, கால இயந்திரத்தில் ஏறி முன்னும் பின்னும் சென்று வந்த உணர்வு நமக்கு. இந்தக் கல்லூரியில் 'கரோசில் ஆஃப் ஃபேஷன்' (ஆடை சுழற்சி முறை) என்ற தலைப்பில் கற்காலம், முகலாயர் காலம், நிகழ்காலம், எதிர்காலம் மற்றும் ஐரோப்பியப் பழங்குடியினர் காலம் என பல்வேறு ஆடைகளில் வலம்வந்து நமது கண்களையும் மனத்தையும் நிறைத்தனர். அந்த வண்ணக்காட்சிகள் இங்கே...

எப்பவும் இப்படியே இருந்துட்டா தீபாவளி, பொங்கல், ஆடித் தள்ளுபடி பற்றி கவலைப்பட வேண்டாம்!



எல்லா ட்ரெண்டும் மாறுது... ஒரு சேஞ்சுக்கு பசங்க வெக்கப்படட்டுமே!

இடைத்தேர்தல்ல
கொடுக்கப் போற
பணத்துக்கு இந்தக்
கூடை பத்தும்தானே?

# கறுப்பு ஆடையில் கொஞ்சும் பறா!





ட்ரெஸ்ஸோட
பளபளப்பு
எனக்கே
கணன்னு
கூசுதுன்னு
நினைக்காதீங்க...
கலர்ஸும்
ஃபேஷன்
லிஸ்ட்ல
இருக்கு!

தேவதைகளின் தேசத்தில் புகுந்த மாதிரி இசையும் ஒளியும் அதிரடிக்க பலவகை ஆடைகளில் வலம்வந்த மின்னல்கள்.



கிறங்கடிக்கும் 'கேக் ஸ்டார்'



கறுப்பு ஆடையில் கொஞ்சும் புறா ('முகல்' பெயிண்டிங்)



மனத்தில் சிறகடித்த 'ஐ' டிசைனிங்



லயிக்கச் செய்த 'லம்போஸேட்'



மனத்தைத் தொட்ட 'முகுரம்'



இதயம் கவரும் 'ஃப்ரஷ் ஆப்பிள்'

தொகுப்பு: ஆர்.பாலா
படங்கள்: விஜய சாமுண்டீஸ்வரி

"நம் நாட்டில் ஓர் அரசனும் ஒரு துறவியும் சேர்ந்து ஓர் இடத்தில் இருப்பார்களேயானால், துறவிக்குத்தான் முதல் மரியாதை அளிக்கப்படும். அவ்வளவு உயர்ந்த ஸ்தானமுடையது துறவியின் தியாக மனப்பான்மை. இந்த உயர்நிலையில் விளங்கிய மகான்களான தியாகராஜர், தீக்ஷிதர், ஷ்யாமா சாஸ்திரி, புரந்தரதாஸர் போன்றவர்களின் பாடல்களை நம் கலைஞர்கள் இசைப்பதால்தான் நமது கர்நாடக சங்கீதத்துக்கு இத்தனை பெருமை!"

பேசியவர் ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னையின் தலைவர் சுவாமி கௌதமானந்தா. ஆகஸ்ட் 1 அன்று ஸ்ரீ கிருஷ்ண கான சபா கோகுலாஷ்டமி சங்கீத விழா துவக்கம் அவர் தலைமையில் நடந்தது.

விழாவில் இரு கலைஞர்களுக்கு விருதுகள். லால்குடி விஜயலக்ஷ்மி 'சங்கீத சூடாமணி' பட்டம் பெற்றார். இவர் லால்குடி ஜெயராமனின் மகள்.

'விஜி' என்று சங்கீத உலகம் ஷார்ட் கட்டில் அவர் பெயரை உச்சரித்தாலும், லால்குடி விஜயலக்ஷ்மி லாங்ரூட்டில் உழைத்து இன்றைய நிலையை அடைந்திருக்கிறார் என்பது அன்றைய வாழ்த்துரைகள் மூலம் தெளிவாயிற்று.

"விஜயலக்ஷ்மி வயலின் வாசிக்கையில் மிகவும் இலகுவாக, முயற்சியின்றி வாசிப்பதாகத் தோன்றும். ஆனால் மெருகும் மேன்மையும் கலந்த அவரது இசைக்குப் பின்னால், ஒரு சிக்கலான பல்லவியை உருவாக்க வல்ல ஞானமும் இருக்கும்" என்றார் அருணா சாய்ராம்.

அதே மேடையில், தஞ்சாவூர் சங்கரய்

# டு தஞ்சாவூர், வயா லால்குடி!

யருக்கு ஆசார்ய சூடாமணி விருதும் வழங்கப்பட்டது.

"மனதிற்குகந்தது முருகன் ரூபம்', 'போ சம்போ' போன்ற மிகப் பிரபலமாகி விட்ட பாடல்களை ரசிகர்கள் அறிவார்கள். ஆனால் அவற்றை தஞ்சாவூர் சங்கரய்யர் இயற்றினார் என்பது பலருக்குத் தெரியவே தெரியாது! சங்கரய்யரின் சங்கீதம் அவரை விஞ்சி நிற்கக் காரணம் அவர் தம்மை முன்னிலைப்படுத்திக் கொள்ள விரும்பாததுதான்" என்று நெகிழ்ந்து பேசினார் ஆசார்ய சூடாமணியுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு பெற்ற டாக்டர் சுந்தர். டாக்டர் ஒரு இசைக் கலைஞரும் கூட. மருத்துவர் என்கிற முறையில், பாரிச வாயு தாக்கப் பெற்ற சங்கரய்யருக்குச் சிகிச்சை அளிக்கப் போக, பெரியவர் பல அரிய சங்கீத அனுபவங்களை டாக்டருக்கு வழங்கியிருக்கிறார்! "அவர் தமது உடல் நிலையை நொந்துகொண்டதே இல்லை. 'கை எப்போ சரியாகும்?' என்று ஒரே ஒரு முறைதான் கேட்டார்... 'வீணை வாசிக்கணும்போல் ஆசையா இருக்கு..' என்றார் கூடவே!"



* லால்குடி விஜயலக்ஷ்மி

திருச்சியிலிருந்து லால்குடி, அன்பில், திருமழபாடி வழியே தஞ்சாவூருக்கு ஒரு ரூட் இருக்கிறது: வளமான வயல்களும், அருமையான கோயில்களும் நிரம்பிய ரூட்! அதில் பயணிக்கும் சுகத்தை நினைவுபடுத்தியது ஸ்ரீ கிருஷ்ண கான சபாவின் துவக்க விழா நிகழ்ச்சி!

– சாயா



* அம்மா ராஜம், அப்பா லால்குடி ஜெயராமனுடன் சிறுமியாக விஜி!

'ராக்கி கா ஸ்வயம்வர்' என்கிற புரோக்ராம் மூலமாக உலகின் பார்வையே இன்று ராக்கியின் மீது! ரியாலிட்டி ஷோவா ராக்கியைக் கூப்பிடு, புரோக்ராம் சக்ஸஸ், டி.ஆர்.பி. ரேட்டிங்ஸ் எகிறிடும் என்பது சேனல்களின் அசையா நம்பிக்கை.

சுயம்வரம் என்ற புராணகால கான்ஸெப்டைக் கொண்டு வந்து ராக்கியை மணப் பெண்ணாகக் காண்பிக்க, இந்தியா மற்றும் வெளிநாடுகளிலிருந்து குவிந்தன மண மகன்களிடமிருந்து விண்ணப்பங்கள். ஏராளமான அப்ளிகேஷன்களிலிருந்து மிக கவனமாக பதினாறு பேரைத் தேர்ந் தெடுத்து. சுமார் ஒன்னரை மாதமாக சுயம்வர புரோக்ராம் வரலாறே படைத்து விட்டது என்று சொல்லலாம்.

**சுயம்வரம் தினத்தன்று ராக்கி அப்சரஸாக ஜொலித்தார்!**



# கங்ராட்ஸ்

உதய்பூர் ஃபதேகட் அரண்மனையில் சுயம்வர ஷூட்டிங். நாளொன்றுக்கு ராக்கிக்கு விதவிதமான ஆடை அணிகலன் கள். ஒரு இளவரசியாகவே வலம்வந்தார். ஆனாலும் தனக்கு கணவனை செலக்ட் பண்ணுவதில் படுகுறியாக இருந்தார். கோட்டை விட வில்லை.

ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு போட்டி. பாட்டு, டான்ஸ், (சரோஜ்கான் டிரெய்னிங்) கவிதை, டேட்டிங்... என விதவித மான போட்டிகள் மணமகன் களுக்கு. தினம் ஒருத்தராக எலிமினேட் செய்தார் ராக்கி.

''என் சுயம்வரத்தில் வந்த பல பையன்கள் இந்த ஷோ மூலமாக பாப்புலராகணும், ஆக்டிங் சான்ஸ் வரணும், தன்னோட ஏரியாவில பிரபலமாகணும்...னு அநாவசிய கற்பனைகளோட வந்தாங்க. முதல்ல இது ஷோ இல்லை. என் னோட வாழ்க்கை, என் திருமணம். இதை யாரும் லைட்டா எடுத்துக்க வேண் டாம்...'' என கறாராகச் சொல்லி கடைசி யில் நாலு பையன்களை செலக்ட் செய் தார்.

மன்மோகன், சித்திஜ், மனோஜ்,

இலேஷ்... என்ற இந்த ஃபைனல் நாலு போட்டியாளர்கள் வீட்டுக்குமே ராக்கி போனார். மம்மிஜீ, டாடிஜீ என்று குழைவாகப் பேசி காலில் விழுந்து குடும்ப விளக்காக அடக்கமாக நடந்து கொண்டார்.

கடைசி ரவுண்டில் மன்மோகன், 'நான் உன்னைத் திருமணம் செஞ்சுக்க முடியாது' என ஜகா வாங்க, ராக்கியின் பயங்கர கோபத்துக்கு ஆளானார். ''உன்னைவிட என் டிரைவரே ஸ்மார்ட். என் பெயர், புகழ் எங்கே... நீ எங்கே... உன் வீட்டுக்கு வந்தேனே... டீ, காப்பி கூட தரவில்லை. சும்மா நான் முழுக்க கூட்டம் கூட்டமா கூடி ஃபோட்டோ எடுத்துக்கிட்டீங்க...'' என்று தாண்டவமாட, பறந்து விட்டான் பையன்.

சுயம்வர நாளுக்கு முதல் நாள் டீ.வி. ஆக்டர்கள் அத்தனை பேரும் ஆஜர். கூடவே எல்லார் மனத்திலும் சந்தேகம். 'இந்த மூன்று பேரில் ராக்கி யாரை செலக்ட் பண்ணுவார்? சுயம்வரம் நடக்குமா?' என்று பல கேள்விகள்.

# ராக்கி!

சுயம்வர தினத்தன்று ராக்கி அப்சரஸாக ஜொலித்தார். நீத்தா லுல்லா என்ற மிகப் பிரபலமான ஃபேஷன் டிஸைனரின் கைவண்ணத்தில் ராக்கி போட்ட 'லெஹங்கா-சோளி' ஒரு சில லட்சங்கள். நகைகளின் மதிப்பு ஒரு கோடியாம்.

தன் சுயம்வரத்தில் ராக்கி தேர்ந்தெடுத்தது கனடா நாட்டு பிரஜையான குஜராத்தி பையன் இலேஷ் பருஜன் வாலாவை! ''முதல் நாளிலிருந்தே இலேஷைப் பிடிச்சுடுச்சு. ரொம்ப டீஸன்ட் பிஸினஸ்மேன். அதனால என் பணம், புகழ் அவருக்குத் தேவையில்லை. இன்னைக்கு எங்கேஜ்மெண்ட், ஆறு மாதம் கழித்துத் திருமணம். இத்தனை நாளா கேமரா நாலாபக்கமும். இனிமேதான் ரியலா ஒருத்தரை ஒருத்தர் புரிஞ்சுக்கணும். நான் மும்பையை விட்டுப் போக மாட்டேன். திருமணமானாலும் சினிமாவில் நடிப்பேன்'' என்கிறார்.



கனடா நாட்டு குஜராத்தி பையன் இலேஷ் பருஜன் வாலாவைக் கணவனாகத் தேர்ந்தெடுத்தார் ராக்கி!

ராக்கியின் வெற்றிக்கு என்ன காரணம்? மனம்திறந்த நேர்மையான பேச்சா, உழைப்பா, அவருடைய அழகா, சிக்கிக் கொள்ளும் சர்ச்சைகளா, நாமறியோம்! குட் லக் ராக்கி...

**- லதா சேகர்**

## வட்டமேஜை

**வி**னோதாவின் பார்வையில் 'தனிமை கண்டதுண்டு' கார்த்திகாவின் வசீகர எழுத்து நடையில் கவிதை ஒன்று சிறு கதையாக உருமாறிவிட்டதோ! - **சாந்தி சுந்தர், நெய்வேலி** ● க்ரைம்.காம்-ல் ஒவ்வொரு வாரமும் ஈஸியான க்ளு. திடீரென்று என்ன ஆயிற்று? இந்த வாரம் அப்படியே 'உல்டா'வாக மாறி மண்டை காய வைச்சிட்டீங்களே! - **மு.மதிவாணன், அரூர்** ● கிராமங்களைத் தேடிச் சென்று பணிபுரியும் தேனி மாவட்ட கலெக்டர் முத்துவீரன் பற்றிய கட்டுரை, ஆயிரக் கணக்கில் பணம் பிடுங்கும் டாக்டர்கள் இருக்கையில் வெறும் அஞ்சு ரூபாய்க்குக் கடமையாற்றும் டாக்டர் புஷ்பவனம் பற்றிய செய்தி, உறவுகளே அன்பு காட்டாத போதும் தாயின் பரிவோடு பாசம் காட்டும் பூக்காரக் கிழவியின் அன்பைக் கூறும் 'பூக்கள் குணம் மாறாது' ஒரு பக்கக் கதை! 9.8.09 'கல்கி' இதழுக்கு 'மனித நேய ஸ்பெஷல்' என்றே தலைப்பு கொடுத்திருக்கலாம்.- **பி.ஆர்.மயிலப்பன், ஈரோடு** ● எம்.பி. திருமாவின் பேட்டி சும்மா சொல்லக் கூடாது... நச்சென்று இருந்தது. - **அ.ராஜா ரஹ்மான், கம்பம்** ● சுடச்சுட 'சினி சிப்ஸ்'கள் சுவைக்கத் தரும் 'நியூஸ் பாய்'க்கு, மனமெனும் பாக்கெட்டுக்குள் 'டிப்ஸ்' எனும் பாராட்டுக் குவியல்கள்! - **ஜி.அப்துல்பாரி, பழனி** ● புதுக்கவிதை மோகத்தில் மரபுக் கவிதையை கோமாவில் தள்ளிவிட்டதில் கல்கிக்கும் பங்குண்டு. 'வெளிச்ச சன்னல்' மரபுக் கவிதையைத் தந்ததன் மூலம் கோமா நோய் குணமாகத் தொடங்கிவிட்டதாக நம்புகிறோம். - **இரா.கல்யாணசுந்தரம், அனுப்பானடி** ● 'தெரியாமத்தான் கேட்கிறேன்' படித்தேன்... பஸ்ஸில் எல்லோருக்கும் தெரியறமாதிரி சிரிக்க வேண்டியதாயிடுச்சு! - **பி.ஜெயபிரகாஷ், சர்கார்பதி** ● அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் இரண்டாம் பரிசு பெற்ற 'கோலிக்குண்டின் மரணம்', இன்றைய கல்வித் துறையின் அவலத்தையும் ஆசிரியர்களின் பொறுப்பின்மையையும் நல்லாசிரியர் விருதுக்கும் அந்த ஆசிரியரின் கடமைக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை என்பதையும் தெள்ளத்தெளிவாகப் படம் பிடித்துக் காட்டியது! - **ராஜ்குமார், தஞ்சாவூர்** ● பிள்ளையின் கார்ட்டூன்கள் இரண்டும் நச். குறிப்பாக புகார் மனு பற்றிய கார்ட்டூன் சரியான நெத்தியடி. -**என்.காளிதாஸ், சிதம்பரம்** ● பெண்களின் வேண்டுதலுக்கு இணங்கி, ஆண்களுக்கும் ஃபேஷன் டிப்ஸ் வழங்கியதற்கு நன்றி! நன்றி!! நன்றி!!! - **என்.பாலகிருஷ்ணன், மதுரை** ● கு.ஞானசம்பந்தனின் 'சிரிப்போம் ஜெயிப்போம்' தொடர் விருட்சமாக வளர்கிறது. 'சும்மா'



என்ற வார்த்தைக்கு இவ்வளவு விளக்கங்கள்; கதைகளா? அம்மாடியோவ்! தலையைச் சுத்துது! - **க.அருள்தேவன், அரியலூர்** ● 'மோதி விளையாடு' விமர்சனம் நிறைவைத் தந்தது. பாராட்டுகள்! - **என்.எஸ். மணிமாறன், திருவண்ணாமலை** ● வாய்ஸ் த 'நாய்'ஸ் பகுதியில் மிமிக்ரி கலைஞர்கள் ரோபோ ஷங்கர், அரவிந்த் பேட்டி, நம்ம வீட்டுப் பிள்ளைகளைப் பற்றிப் படிப்பது போல் மனத்துக்கு மகிழ்ச்சியாக இருந்தது. - **ஆர்.பிருந்தா ரமணி, மதுரை** ● ஓவியர் ஆர்.வரதராஜனின் பேட்டி, அவருடைய ஓவியம் மாதிரியே ரொம்ப ரியல்! - **எஸ்.வி.பார்த்தசாரதி, திருச்சி-5** ● 'வெளிச்ச சன்னல்' என்ற தமிழ்மணவாளன் கவிதை இதயத்தைக் கவர்ந்தது!- **இந்திரன், நாகர்கோவில்** ● 'தபால்காரரை எதிர்பார்த்துக் காத்திருக்கும் தவிப்பு காதலைப்போல சுவாரஸ்யமானது' - அதாவது காதலியின் வருகையை எதிர்பார்த்து இருப்பதைப் போன்றது என்பதைச் சொல்லாமல் சொல்லும் சேரனின் பொக்கிஷத்தைப் பெரிதும் ரசித்தோம்! - **பகவதி பிரவின், சென்னை-53** ● இந்தக் காலத்திலயும் திரிகடுகம் மூலிகை காப்பி மதுரையில் கிடைப்பது ஆச்சர்யமாக இருந்தது. ஆரோக்கியத்துக்காக மதுரைக்கு ஒரு டிக்கெட் இல்ல... ஐந்து டிக்கெட் போட்டு குடும்பத்தோடு போகணும். அப்படித் தானுங்க...! - **ஜெ.ரெஜினா பானு, பழனி** ● கல்கி வாங்கியவுடனே இப்போது முதலில் படிப்பது 'தீராத விளையாட்டு விட்டலனைத்'தான். அருண் சரண்யாவுடன் நாமும் கூடவே பயணிப்பது போன்ற பிரமிப்பு தவிர்க்க முடியாமல் ஏற்படுகிறது. பாராட்டுகள்! - **ம.சங்கரி ரமேஷ், கோவை**



# மனித நேய ஸ்பெஷலா?

**துப்பறிய வாங்க போட்டி - 5 முடிவு**

சரியான விடை எழுதியவர்களில் குலுக்கல் மூலம் ரூ.200/- பரிசு பெறும் ஐந்து பேர் :

1. **ஆர்.வனஜா, போளூர்**
2. **எஸ்.ரவிக்ரம், மங்கலம்**
3. **எல்.மாறன், மேல்பட்டி**
4. **என்.ரங்கசாமி, கோயமுத்தூர்**
5. **ஆர்.பஞ்சவர்ணம், போளூர்**

ஐந்து கல்லூரி மாணவிகள் ஒண்ணா சேர்ந்தா என்ன செய்வாங்க? அரட்டை, ஷாப்பிங், சினிமா... வெய்ட், வெய்ட்... அவங்களுக்கு ஃபேஷன்ல துளியூண்டு இன்ட்ரெஸ்ட். 'அப்படீன்னா ஃபேஷன் ஷோ, ராம்ப் வாக் ட்ரை பண்ணுவாங்க அல்லது மாடல்ஸ் போட்டுக்க மாடர்னா ட்ரஸ் டிசைன் பண்ணுவாங்க'ன்னு சொல்ல வர்றீங்க. அதேதான்... ஆனால், ஒரே ஒரு மாற்றம், தங்கள் பேராசிரியையின் வழிகாட்டுதலோடு அவர்கள் டிசைன் செய்திருப்பது மாடல்களின் ஃபேஷன் ஷோவுக்காக அல்ல. அணகாபுத்தூர் நெசவாளர்களின் மறுவாழ்வுக்காக. ஐந்து இளைஞர்களின் ஐடியாவாச்சே. புதுமை இல்லாமலா... கத்தாழை நார், அன்னாசிப் பழ நார் - இவைதான் ஆடைகளுக்கென இந்த நவயுவதிகள் கண்டறிந்த நவீன இழை. அவர்களே சொல்கிறார்கள்...

''நெசவுத்தொழிலுக்குப் பேர்போன ஊர் அனகாபுத்தூர். ஆனா, அங்க இருக்கற நெசவுத் தொழிலாளர்களோட வாழ்க்கை ரொம்ப பரிதாபமா இருக்கு. ஏதாவது செஞ்சு அவங்களோட வாழ்க்கைல நம்பிக்கை வெளிச்சத்தை ஏற்றி வைப்போம்னு முடிவு செஞ்சு கத்தாழை நார் அன்னாசிபழ நார்ல சேலை நெய்யற திட்டத்தோட களம் இறங்கினோம். இன்னைக்கு அதை எல்லாரும் பாராட்டுகின்றனர்'' என்கிறார் பேராசிரியை கலைவாணி.

''சுமார் ஒரு வருட காலம் இந்த ப்ராஜெக்ட்ல முழுமூச்சா இறங்கிச் செயல்பட்டோம். நம்மால் ஒரு குறிப்பிட்ட அளவு மக்களை நல்லபடியா வாழ வைக்க முடியுதுன்னா அது எவ்வளவு பெரிய சந்தோஷம். இந்த ப்ராஜெக்ட் மூலமா ஒரு பிஸினெஸை எப்படிச் செய்யணும், எப்படி மார்க்கெட்டிங் பண்ணணும்னு கத்துக்கிட்டோம்...'' என்கிறார் மூன்றாம் ஆண்டு பி.சி.ஏ. மாணவி ஷாலினி.

# கத்தாழை சேலை...



''இதுல நச்சுத் தன்மை கிடையாது. சுத்தமான சருமத்தைக் குளுமையாக வெச்சுக்கக் கூடியது. அதுல நெய்த ஆடை குளுமையாத்தானே இருக்கும். அதே போலதான் அன்னாசிப் பழமும். நம் ஊரில் எப்பவும் கிடைக்கக் கூடிய பழம் அது. அதோட நார் சூரியனோட தாக்கத்துலேர்ந்து





ஒத்துழைப்பு கொடுத்தாங்க. காலை 5.30 மணியிலேருந்து ராத்திரி 10.30 மணி வரைக்கும் ஃபீல்ட் வொர்க் செய்த நாட்கள் மறக்க முடியாதவை'' என்கிறார் அஞ்சனி. 'ஸ்டூடண்ட்ஸ்

# அன்னாசி சட்டை..!

நம்மைப் பாதுகாக்க கூடியது. நெசவாளர்களால புதுமையான ஒரு ஆடையை நிச்சயம் வெற்றி கரமா நெய்ய முடியும்; அதன் மூலம் அவங்களுக்குப் பெரிய மறுவாழ்வு கிடைக்கும்னு இந்தச் சமுதாயத்துக்கு எடுத்துக்காட்ட இது நல்ல சந்தர்ப்பமாக அமைந்தது'' என்கிறார் மூன்றாம் ஆண்டு பி.காம் மாணவி ஐஷ்வர்யா. ஃபீல்டு வொர்க் அனுபவத்தையும் பகிர்ந்துகொண்டனர் நம்மோடு...

''எத்தனையோ நாள் அனகாபுத்தூர் நெசவாளர்களோட இருந்துட்டு வீடு திரும்ப ராத்திரி பத்து மணிகூட ஆகிடும். ஆனா பெற்றோர்கள் எங்களோட இந்தச் சமூக சேவையைப் புரிஞ்சுக்கிட்டு முழு

**பேராசிரியர் கலைவாணியிடம் சில கேள்விகள்:**

**எங்கே கிடைக்கும்?**

எல்லா இடங்களிலும் பரவலாகக் கிடைக்கின்றன. தேவையிருப்போர் எங்களைத் தொடர்பு கொள்ளலாம். போன்: 97104 27476

**என்ன விலை?**

ரூ.400/-லிருந்து ரூ.4000/- வரை

**சைட் எஃபெக்ட்?**

சான்ஸே இல்லை.

ஒண்ணு சேர்ந்தா எதையுமே சாதிக்க முடியும். அனகாபுத்தூர் நெசவாளர்கள் வாழ்க்கைல இப்போ ஏற்பட்டு இருக்கிற நல்ல மாறுதல்களே அதுக்கு சாட்சி'' என்று சக்சஸ் ஃபார்முலாவை, சத்தம் போட்டுச் சொல்கின்றனர்.

**- நளினி சம்பத்குமார்**

''மனிதனிடமிருந்துதான் வார்த்தைகள் வெளிப்படுகின்றன. என்றாலும் மனிதனைவிட வார்த்தைகள் வல்லமை பொருந்தியவை. மனிதன் அழிந்து விடலாம். ஆனால், அவனுக்குப் பின்னும் வார்த்தைகள் வாழ்ந்து கொண்டிருக்கும். எனவேதான் நான் மனிதர்களைவிட வார்த்தைகளை அதிகம் நம்புகிறேன். பைபிளில்கூட ஒரு வசனம் வரும். 'கடவுள் வார்த்தையாய் இருக்கிறார்.'' - ஒரே வார்த்தைப் புராணமாக இருக்கிறதா? வேறொன்றுமில்லை, கவிஞர் தியாருவிடம் பேசும்போது இதுபோல ஏராளமான சிந்தனைகள் வந்து விழுகின்றன.

தியாரு கவிஞர் மட்டும்தானா என்றால், 'விளம்பரத்துறையின் நம்பர் ஒன் தமிழ் க்ரியேட்டிவ் ரைட்டர், கட்டுரையாளர், சினிமா பாடலாசிரியர்; நான்கு கவிதை நூலுக்குச் சொந்தக்காரர்' என்று பட்டியல் நீள்கிறது. அவருடனான சந்திப்பிலிருந்து...

* கவிஞர் தியாரு

''நான் படிச்சதெல்லாம் ஆங்கில வழிக் கல்விதான். ஆனால், இன்னைக்கு எனக்குப் பொருளீட்டித் தருவதும் புகழ் சேர்த்துத் தருவதும் தமிழ்தான். அத்தனை முன்னணி விளம்பர நிறுவனத்தோடும் பணிபுரிந்தாயிற்று! இதுவரை 800க்கும் மேற்பட்ட ஜிங்கிள்ஸ் எழுதியாயிற்று. 300க்கும் மேற்பட்ட விளம்பரப் படங்களுக்கு ஸ்கிரிப்ட் எழுதியாயிற்று. இது எல்லாமும் எனக்குத் தமிழால் தான் சாத்தியமாயிற்று'' என்றவரிடம், ''பொருளுக்குச் சரி, ஒரு கலைஞனுக்கு விளம்பரம் தேவையா?'' என்று கேட்டால், ''விளம்பரத்தில் உன்னைத் தொலைத்துவிடாதே, விளம்பரமில்லாமல் தொலைந்து போகாதே'' என்று புன்னகைக்கிறார்.

''விளம்பரங்களுக்குப் பாடல்கள், வானொலி விளம்பரங்கள், பேப்பர் விளம்பரங்கள் எழுதினாலும், கவிதையைப் போல எனக்கு ஊக்கம் தருகிற விஷயம் வேறில்லை. நான் விளம்பரப் படங்களுக்குப் பாடல்கள் எழுதுவதால் எனக்குப் பொருளும் புகழும் கிடைத்

# கலைக்கு

தாலும், என்னை எழுதச் சொல்லி இயக்குவது கவிதைகளும், படைப்பிலக்கியங்களும்தான்'' என்றவரிடம், ''உங்களின் கலையை விலையாக்கலாமா?'' என்றால், சிரித்துவிட்டுத் தொடர்கிறார்.

''அதிலென்ன தவறு? கலையை மட்டும் நம்பி இருக்கிற கலைஞன் வாழ்வதற்குத் தேவையானவற்றை வேறெங்கிருந்து பெறுவது? கலையால் கலைஞன் வாழ்ந்தால் தவறில்லையே! வளமையில் செத்தவர்களைவிட வறுமையில் செத்த கலைஞர்களும், கவிஞர்களும் தானே இங்கு அதிகம். பாரதிகூட முதலில் காணி நிலம்தான் கேட்டான். பிறகுதான் கவிதையால் வையத்தைப் பாலித்திட வேண்டும் என்று சொன்னான். சேர்ந்தே இருப்பது புலமையும் வறுமையும் என்ற புராதனமான கருத்தில் எனக்கு உடன்பாடு



**''நல்ல சந்தர்ப்பத்தில் நாமிருவரும் இணைந்து பணியாற்றுவோம்'' என்றார் ஏ.ஆர்.ரஹ்மான்!**

இல்லை. கலைக்கு விலையும் தவறில்லை'' என்கிறார் கவிஞர் தியாரு.

''விளம்பரத்தில் சாதித்தாயிற்று. அடுத்து திரைப்பாடல்தானே...'' என்றால், ''நான் ஏற்கெனவே இயக்குநர் ஜானகி விஸ்வநாதன் இயக்கத்துல பாட்டு எழுதியிருக்கேன். மூன்று; டீ.வி. சீரியல்களுக்கு டைட்டில் ஸாங் எழுதியிருக்கேன். என் பாடலைக் கேட்டுட்டு பரத்வாஜ் ஸார் அவரோட இசையில பாட்டு எழுதறதுக்கு வாய்ப்பு கொடுத்திருக்கார். ஏ.ஆர்.ரஹ்மான் ஸாரை, அவர் ஆஸ்கார் விருது வாங்கறதுக்கு முன்னாடி ஒருமுறை யதேச்சையாகச் சந்திச்சேன். அப்ப என்னோட பாடல்களைச் சொல்லி என்னை அறிமுகப் படுத்திக்கிட்டபோது சொன்னார், 'விளம்பரப் பாடல்களில் தமிழ் கொஞ்சி விளையாடுவது இப்போது அதிகமாக இருக்கிறது. உங்களின் விளம்பரப் பாடல்களை நான் கவனித்திருக்கிறேன். சந்தர்ப்பம் அமையும்போது நாம் இருவரும் இணைந்து பணியாற்றுவோம்' என்றார்'' என்று சொல்லும் கவிஞர் தியாருவின், 'நான் கல்லாய்க் கிடந்தபோது' என்ற கவிதை, திருநெல்வேலியில் ஒரு கல்லூரியில் பாடத்திட்டமாக இருக்கிறது.

- கமலி

# விலை தவறில்லை!

● **வி.ஜி.சத்தியநாராயணன், நங்கநல்லூர்**

**நீங்கள் 'மிஸ்டு-கால்' கொடுப்பது உண்டா?**

நான் என் மனைவிக்கு 'Mrs.டு-கால்' கொடுப்பது உண்டு!

● **டி.வி.ராமமூர்த்தி, சோழிங்கநல்லூர்**

**கிரேஸிக்கும் விளையாட்டுக்கும் எவ்வளவு தூரம்.?**

TVக்கும் SOFAவுக்கும் இடையில் உள்ள தூரம். வேடிக்கை 'பார்ப்ப தோடு சரி. அதையும் மீறி விளையாட வற்புறுத்தினால் 'ஆளை விடுங் கப்பா' என்று விளையாட்டுக்கு கை கூப்பிடு தூரம்.

● **பா.அசோக், திருவில்லிப்புத்தூர்**

**ஆசை வெட்கம் அறியுமா?**

வெட்கம் ஆசையை அறிவிக்கும்!

● **அ.யாழினி பர்வதம், சென்னை**

**பெரும்பாலும் கை ரேகை, ஜோஸ்யம் பார்ப்பவர்கள் குமரி களாக இல்லாமல் கிழவிகளாக இருப்பது ஏன்?**

கடந்த காலம் அறிந்த கிழங்களால் தான், எதிர்கால - கப்ஸா விட முடியும்!

● **எஸ்.பொருநை பாலு, திருநெல்வேலி**

**தன்னை இழந்தால் தரணி ஆளலாமா.?**

மனிதன் 'தன்'னை இழந்தால், மிஞ்சுவது money. Money இருந்தால் தரணி ஆளலாம்.

● **பி.கவிதா, கோவிலாம்பூண்டி**

**குருட்டு அதிர்ஷ்டத்தின் மீது உங்களுக்கு நம்பிக்கை உண்டா?**

அதிர்ஷ்டம் ஊமை. அதனால்தான் கதவைத் தட்டுகிறது. நாம் செவிடாக இருந்தால், அதிர்ஷ்டம் வந்ததும் கதவைத் தட்டியதும் தெரியாமல் போய்விடும். அப்போது அது கண்ணுக்குத் தெரியாத குருட்டு அதிர்ஷ்டமாகி விடும்.

● **என்.கோமதி,நெல்லை**

**கிரேஸிக்கு கடவுளாக மாறும் வாய்ப்பு கிடைத்தால்?**

'டிராமா, சினிமா, டி.வி, கல்கி கேள்வி பதில்' என்று எனக்கு ஒரே சமயத்தில் நான்கு வேலை வாய்ப்பு வரும். அதைச் சமாளிக்க 'நான்கு முகம் இருந்தால் நல்லா இருக்குமே' என்று நான் நினைப்பது உண்டு. ஆக, என் தேர்வு, படைக்கும் கடவுள் நான்முகன் பிரம்மன்.

● **ஆர்.ஜெயபாரதி, விருதுநகர்**

**ஒரு லிஃப்ட், நீங்களும் ஒரு கன்னிப் பெண்ணும் தனியாகப் பயணம். திடீ ரென்று லிஃப்ட் பழுதாகி நின்று விட் டால்?**

"அம்மா கன்னிப் பொண்ணு தாயே. வழக்கமா நான் படிகளைத்தான் பயன் படுத்துவேன். லிஃப்ட்ல போறது எனக்கு இதான் கன்னி முயற்சி. துணைக்கு நீ இருக்கேங்கற தைரியத்துல வந்துட்டேன். காப்பாத்தும்மா" என்று கதறி அழுது, அவளுக்கு என் பயத்தைக் காட்டி, என் மீது அவளுக்கு வர இருந்த பயத்தைப் போக்குவேன்.

• சரா.ஏ.முரளி,
கள்ளக்குறிச்சி

முற்றிலும் ஞானம் அடைந்த குருவை அடையாளம் காண்பது எப்படி?

குருவும், சீடனும் காந்தமும் இரும்பும் போல; மனத்தில் சேர்ந்த 'துரு' நீங்கினால் காந்த 'குரு' இழுத்துக் கொள்ளும்.

• என்.சண்முகம்,
திருவண்ணாமலை

'சுருக்'கென்று ஒரு சிறுகதை?



'சுருக்'கென்று ஊசி போட்டு விட்டு டாக்டர் கேட்டார்

''வலிக்குதா.?''

''இல்லை.''

''இப்ப வலிக்கும் பார்'' என்று சொல்லி பில்லை நீட்டினார்.!

• மு.மதிவாணன்,
அரூர்

எப்போதும் நம்மால் உஷாராக இருக்க முடியுமா?

ஆபத்து வரும் முன் உஷாராக இருப்பது முடியாவிட்டால், அட் லீஸ்ட் வந்த பின் தப்பித்து வேகமாக ஓட 'பி.டி. உஷாராக' இருப்பது உசிதம்!

## 'சுருக்'கென ஒரு சிறுகதை

**ச.ந.கண்ணன்**

விளையாட்டு வீரர்கள் நிதி உதவிக்காகத் தள்ளாடுவதெல்லாம் நம் ஊரில் மட்டும்தான். பள்ளிகளில் வழங்குவது போல பங்களிப்புச் சான்றிதழ் மட்டுமே வழங்கப்பட்ட போட்டிகளெல்லாம் உண்டு. ஆனால், டென்னிஸ் போன்ற விளையாட்டுக்களைத் தொழிலாகக் கொண்ட வீரர்கள் மிகச் சுபிட்சமாக வாழ்கிறார்கள்.

ரோஜர் ஃபெடரர் லட்சுமி கடாட்சம் கிடைக்கப் பெற்று டென்னிஸ் விளையாட்டின் நெ.1 பணக்காரர் ஆகியிருக்கிறார். ஃபெடரருக்கு 27 வயது. சராசரி இந்திய இளைஞர்கள் நல்ல வேலையில் அமரும் வயது. தனி வாழ்க்கையைத் தொடங்குகிற வயது. ஆனால் இந்த 27 வயதுக்குள் யாருமே எட்டமுடியாத உயரத்துக்குச் சென்றுவிட்டார் ஃபெடரர். "14 கிராண்ட் ஸ்லாம்கள் வாங்கிவிட்டேன். என்னை விஞ்ச யார் இங்கு உண்டு என்று நினைத்திருந்தேன்" என்று ஃபெடரரின் 15வது கிராண்ட் ஸ்லாம் கோப்பைக்கு ஏக்கம் கலந்த வாழ்த்துக்களைத் தெரிவித்த பீட் சாம்பிராஸ்தான், பரிசுத்தொகையிலும் நீண்ட நாளாக முதலிடத்தில் இருந்தார். அவர் தம் வாழ்நாளில் சம்பாதித்த 216 கோடியை சமீபத்தில் முந்தியிருக்கிறார் ஃபெடரர். இதுவரை டென்னிஸில் இவர் சம்பாதித்திருப்பது 250 கோடி.

ஆனால் இந்தச் சாதனையை ஒருவர் துரத்திக்கொண்டு அருகில் வரவிருக்கிறார். 22 வயதில் ரஃபேல் நடால் சம்பாதித்த பணம் - 125 கோடி. அடுத்த 125 கோடியைத் தொட நீண்ட காலமாகாது.

# செரீனா 130 கோடி... சானியா 8 கோடி..!

டென்னிஸ் போட்டிகளின் பரிசுத் தொகை அதிகமாகிவிட்டது. விம்பிள்டன் வென்றால் ஏழரை கோடி. ஃபெடரர் ஐந்து விம்பிள்டன்கள் வாங்கியிருக்கிறார். முதல் நிலை வீரராக இல்லாவிட்டாலும் தம் வாழ்நாளில் சிறந்த வீரராக விளங்கிய ஆண்ட்ரூ அகாசி 155 கோடி சம்பாதித்துள்ளார். அவர் மனைவி ஸ்டெஃபி கிராப் 110 கோடி. நவரத்திலோவாவை விட இரண்டு கோடி அதிகம். ஒரு விளையாட்டில் இத்தனை பேர் இவ்வளவு தொகை ஈட்டுவது டென்னிஸில்தான்.

பெண்களில் அதிகம் சம்பாதித்த வீரர் செரீனா வில்லியம்ஸ். 130 கோடி. நம் ஊர் சானியா மிர்சா 8 கோடி ரூபாய். நம் நினைவு தெரிந்த நாள் முதல் ஆடிவரும் லியாண்டர் பயஸ் 26 கோடியையும் பூபதி 23 கோடியையும் டென்னிஸ் வழியாக ஈட்டியிருக்கிறார்கள்.

அடக்கடவுளே, டென்னிஸ் ஆடினால் இவ்வளவா சம்பாதிக்க முடியும் என்றெல்லாம் வியக்காதீர்கள். கோல்ஃப் சாம்பியனான டைகர் வுட்ஸ் கடந்த பத்து வருடத்தில் மட்டும் 3800 கோடி ரூபாய் சம்பாதித்திருக்கிறார். 2010ல் அவர் 5000 கோடியைத் தொட்டுவிடுவார் என்று கணக்கிடுகிறார்கள். இதுபோன்ற எந்த பேங்க் அக்கவுண்ட்டும் இல்லாமல், அத்தனை இடிபாடுகளுக்கு மத்தியிலும் ஒலிம்பிக்கில் தங்கம் வென்று நாட்டுக்குக் கௌரவம் தேடித்தர ஆசைப்படும் இந்திய விளையாட்டு வீரர்கள் போற்றுதலுக்குரியவர்கள். ●

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.